# நூல் அறிமுகம்


| | |
|---|---|
| நூலின் பெயர் | : வெளிச்சத்திற்கு வாங்க -1 |
| நூல் ஆசிரியர் | : விசு அய்யர் |
| எழுத்து | : 11 புள்ளி |
| முதற் பதிப்பு | : 2022 |
| உரிமை | : ஆசிரியருக்கு |
| கணினி அச்சு உதவி | : மணி பதிப்பகம் |
| பக்கம் | : 72 |
| மதிப்பு | : இந்திய ரூபாயில் ரூ.60 |

# மதிப்புரை

ஒரு வாசகன் மதிப்புரை வழங்குகிறேன். இது பெருமையா, பெரிய பொறுப்பா தெரியவில்லை. நூலுக்கு மதிப்புரை வழங்குவதில், இது புது அனுபவம் தான் என்றாலும், அதையும் அனுபவித்து பார்க்க வேண்டாமா என்ற ஒரு வாய்ப்பினை தந்த இந்நூலாசிரியருக்கு வணக்கத்தை பதிவு செய்கிறேன்.



**R. Manikandan,** B.Com.
Treasurer, arulalayam

எழுதுவது என்பது ஒரு கலை. அதையும் ரசிக்கும்படி படைப்பது ஒரு சுவை. அந்த படைப்புக்களை உரியவர்களுக்கு எடுத்து செல்வது நல்ல சேவை. அந்த சேவை பயனத்தில் கருத்துக்களை சுமந்து செல்லும் இனிப்பு கண்ட எறும்பு போல இந்த நூலாசிரியரின் சிந்தனை கருத்துக்களை சுற்றியே வருவேன்.

ஒரு சோதிட குழுவில், தற்செயலாக இவருடைய சோதிட சிந்தனைகளையும், குழுவில் இவர் தம் படைப்புகளையும் ரசித்து பழகியவன்

இயல்பாக நடக்கும் ஒரு செயலை சுட்டி காட்டி, இதில் உள்ள சோதிட சிந்தனை என்ன என கேட்டு நம்மையும் சிந்திக்க வைத்து சிந்தனையையும் புரிய வைக்கும் இந்த நூல் ஆசிரியர், தனது அதே பாணியில், "**வெளிச்சர்த்திற்கு வாங்க**" என்ற தலைப்பில் பால சோதிடம் என்ற வார இதழில் வெளியான தனது கட்டுரைகளை தொகுத்து ஒரு நூல் படைத்து இருக்கிறார்.

"வெளிச்சதிற்கு வாங்க.." என்ற புத்தக தலைப்பினை பார்த்ததும், நான் வெளிச்சத்தில் தான் இருக்கிறேன், என்னோடு வாருங்கள் என்று அழைப்பது போல உணர்வை ஏற்படுத்தியது என உங்களை போலவே நானும் உணர்ந்தேன்.

இந்த நூலில் ஒவ்வொரு கட்டுரையிலும், முதல் பகுதியில், ஒரு சிந்தனையை எடுத்துக் கொண்டு, அது பற்றிய விவரமான குறிப்புகளை தந்து, சோதிட சிந்தனைகளையும் இணைத்து சொல்லி, அடுத்த வாரம் அய்யர் என்ன சொல்ல போகிறார் என்ற ஏக்கத்தை ஏற்படுத்தும் விதமாக ஒவ்வொரு படைப்பும் அமைந்து இருக்கிறது.

நானும் தான் எழுதுகிறேன். எனக்கு இப்படி இது போல ஒரு சிந்தனை வருவதில்லையே என சில சமயம் ஏங்கி கொண்டு இருந்தாலும், சோதிடம் என்னும் கடலில் நீந்தி கொண்டு இருக்கும் ஒரு நீச்சல்காரன் நான். எனக்கு தொழில் சோதிடம் இல்லை

புதிய சிந்தனைகளுக்கு, நூலாசிரியர் போன்ற படைப்பாளிகளின் புத்தகங்கள் பயன் தரும். பொதுவாக, சோதிட நூல்கள் சோதிட கருத்தை, விதிகளை எடுத்து சொல்லும். அந்த வகையில் இந்த நூலாசிரியர், தமக்கு என தனி பாணியில், எடுத்துக் கொண்ட சிந்தனையின், கருத்துக்களை இன்றைய இயல்பு வாழ்க்கைக்கு ஏற்ப எடுத்து சொல்லி, வளர்ந்து வரும் சோதிடர்களுக்கு விவரம் சொல்வது போல அமைத்து, சோதிட சிந்தனைகளையும் சேர்த்தே சொல்லி, சோர்வில்லாமல் படிக்க நம்மை தூண்டும்படி அமைந்து உள்ளது இந்த '**வெளிச்சதிற்கு வாங்க**" என்ற இந்த நூல்.

பன்முக திறமை கொண்ட இந்த நூல் ஆசிரியரின், படைப்புகளில் சோதிட நூல் வரிசையில் இது மக்கள் மனதில் இடம் பிடிக்கும் என உறுதியாக சொல்லலாம். இந்த புத்தகத்தை வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும் என அன்புடன் விரும்புகிறேன்..


உங்கள்

**மணிகண்டன்**

*maniiyer73@gmail.com*

# என்னுரை

அறியாமை என்பது அனைத்து பிரிவினரிடமும் இருக்க தான் செய்கிறது. இன்று புதிதாய் பிறந்தோம் என்று பாரதி சொல்வது போல இன்று புதியதாய் கற்றுக் கொண்டோம் என சொல்ல எத்தனை பேருக்கு தைரியம் வரும் சொல்லுங்கள்.

நாம் எந்த துறையில் நிபுணத்துவம் பெற்று இருக்கிறோமோ, அந்த துறையிலேயே தெரியாதன என சில இருக்கத்தான் செய்யும். இது தவறும் அல்ல சரியும் அல்ல. தெரியாதனவற்றை தெரிந்து கொள்வதும் தெரிந்தவற்றை எடுத்து சொல்வதுமே முதிர்ச்சி நிலையின் முதற்படி.

அறியாமை என்பது இருள். அறிவு பெறுதல் என்பது ஒளி என்ற தத்துவப் படி அறியாமையில் இருந்து அறிவு நிலைக்கு செல்வதே வளர்ச்சி.

இந்த அறியாமை எல்லா நிலையிலும் இருக்கும் என்பதால் தான் ஔவையார் கற்றது கை மண் அளவு என்று சொல்லி இருக்கிறார்.

இந்த படி நிலையில் சில அடிப்படை சிந்தனைகளை அடுக்கி வைத்து நாம் தெரியாதனவை என இருப்பதை சிந்திக்க தந்து சோதிட கருத்துக்களை இணைத்தே சொல்லி இந்த நூலை உங்களுக்கு சமைத்து படைக்கிறோம்.

இந்த நூலில் உள்ள சிந்தனைகள், நக்கீரன் குழுமத்தில் இருந்து வரும் பால சோதிடம் என்ற வார இதழில் வெளிவந்தவைகள். அவைகளை தொகுத்து உங்கள் ரசனைக்கு ஏற்ப அடுக்கி வைத்து நூலாக தருவதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

இந்த நூலினை வழக்கம் போல கணினி அச்சு செய்து புத்தகமாக உருவாக்கி கொடுத்த மணிபதிப்பகத்தாருக்கு நன்றியை பதிவு செய்கிறேன்.

எனது வேண்டுகோளை ஏற்று நூலிற்கு மதிப்புரை தந்த அருளாலயம் அமைப்பின் பொருளாளர் திரு மணிகண்டன் அவர்களுக்கு மனம் நெகிழ்ந்த நன்றியையும் வாழ்த்துக்களையும் பதிவு செய்கிறேன்.

நமது நூல் படைப்பின் வரிசையில் இன்னொரு பதிப்பு என்ற ஆவலில் இந்த புத்தகத்தினை வழக்கம் போல வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டுகிறோம்.

இந்த நூல் அமேசான், விக்கி மீடியா மற்றும் மின் நூலகம் போன்ற தளங்களில் கிடைக்கும். channel G என்ற podcastல் ஆடியோவாகவும் கேட்டு பயன்பெறலாம்.

வாசகர்களின் அன்பு ஆதாரவுக்கு நன்றிகளை பதிவு செய்து நூலுக்குள் அழைத்து செல்கிறேன்.

பேரன்புடன்

**விசு அய்யர்**

iyervisuiyer@gmail.com

# “வெளிச்சத்திற்கு வாங்க...”

“என்னது சோதிட ஆலோசனையா...?”

ஆத்தாடி பயமாக இருக்கே...

திசை புத்தி சரியில்லைன்னு சொல்லுவாங்க...உங்களுக்கு தோஷம்னு சொல்லுவாங்க... பரிகாரம் செய்ய சொல்லுவாங்க... காசு கூட கேட்பாங்க... வேண்டாமுங்க நமக்கு இந்த சோதிடம்-பரிகாரம் எல்லாம் என்று ஒரு எட்டு தள்ளி நிற்பவரா நீங்கள்...

இந்த பக்கம் கொஞ்சம் காதை கொடுங்கள்..

சோதிடம் என்பது ஒன்பது கோள்கள், 27 நட்சத்திரங்கள், அறிவியல் ரீதியான வானவியல் என்பது போல சொல்லி உங்களை பயமுறுத்த போவதில்லை.. ராகு கேது, பாற்கடலை கடைந்து.... என்பது போல புராண கதைகளை சொல்ல போவதில்லை... வேறு உதாரண ஜாதகங்களை கொடுத்து உங்களை போரடிக்க செய்ய போவதில்லை.

அடிப்படையில் சில செய்திகளை புரிந்து கொள்ளுங்கள்..

வாழ்க்கை என்பது எப்போதுமே இரட்டை தன்மை கொண்டது. ஏறுமுகம் இருப்பது போல இறங்கு முகமும் இருக்க தான் செய்யும்.. அதனால் தான் ஆறுமுகத்தை வழிபடுங்கள்... வாழ்க்கை நிதானமாக அமையும் என்று சோதிடர்கள் ஆலோசனை சொல்கிறார்கள்.

அது என்ன இரட்டை தன்மை...

ஒரு வருடத்தை எடுத்துக் கொண்டால், இருள் நிறைந்த, (ஆடி முதல் தை வரை-தட்சிணாயனம் , ஒளி மிகுந்த (தை முதல் ஆடி வரை-உத்திராயணம்)

ஒரு மாதத்தை எடுத்துக் கொண்டால், பூர்வ பக்ஷம்(அமாவாசையில் இருந்து), கிருஷ்ணபக்ஷம் (பவுர்ணமியில் இருந்து)

ஒரு நாளை எடுத்துக் கொண்டால் பகல் இரவு என..
இப்படி எல்லாவற்றிலும், இரட்டை தன்மை கொண்டது தான் வாழ்க்கை என்ற இந்த அடிப்படையை புரிந்து கொண்டு விட்டால் மகிழ்ச்சியாக இருக்க முடியும்.

பங்கு சந்தையில் கூட ஒவ்வொரு ஏற்றத்திற்கும் ஒரு இறக்கம் உண்டு.. ஒவ்வொரு இறக்கத்திற்கும் ஒரு ஏற்றம் உண்டு. நிரந்தர தோல்வி எப்போதும் இல்லை நிரந்தர வெற்றி எங்கேயும் இல்லை.

பல கோடி மதிப்புள்ள கார் வைத்து இருப்பவர்,
பணத்திற்காக அவரிடம் வேலை செய்யும் டிரைவர் என
இருவரும் ஒரே காரில் பயணம் செல்கிறார். பணம் செலவு செய்து பெறும் அதிர்ஷ்டத்தை, பத்து ரூபாய் கூட செலவு செய்யாமல் அந்த சுகத்தை தினம் தினம், அனுபவிக்கும் டிரைவர் என நிறையா சொல்ல முடியும்.

எனவே வாழ்க்கை என்பது அடிப்படையில், நிலை மாறும் தன்மை கொண்டது என்பதை புரிந்து கொண்டால், பிரச்சனைகளை தொட்டு பார்ப்பது சிரமம் இல்லை.

அதெல்லாம் சரிங்க... என்னுடைய பிரச்சனைக்கு ஏதாவது வழி சொல்லுங்க என்று கேட்க வருகிறீர்களா?

சரி தான்..

சோதிடரை பார்த்தவுடன் நம்ம பிரச்சனை தீர்ந்து விடும் என்று நினைக்காதீர்கள்.. சோதிடரை பார்த்தவுடன், எனக்கு இந்த ராசி நட்சத்திரம், எனக்கு வாழ்க்கை எப்படி இருக்கும் என்பது போல கேட்காதீர்கள்.. ஜாதக குறிப்பு சொல்வதை தான் சோதிடர் சொல்லுவார்.

நோய் உள்ள ஒருவர் மருத்துவரை சந்தித்ததும் நோய் குணமாகி விடுமா?

நோயின் தன்மையை தான் மருத்துவரால் சொல்ல முடியும்..அதை நேர் செய்ய சில வழி முறைகளை ஆலோசனைகளை தருவார். மற்றது உங்கள் கையில் தானே.

சோதிடர் என்பவர் உங்களுக்கு வழி காட்டும் நல்ல ஆலோசகர், என்பதை புரிந்து கொண்டு, நான்கு இடத்தில் நம்பிக்கை வைக்க வேண்டும்..

முதலில் சோதிடத்தில் நம்பிக்கை, சோதிடர் மீது நம்பிக்கை, நம் மீது நம்பிக்கை, வழக்கம் போல, இறைவன் மீது நம்பிக்கை என இருந்து விட்டால்.. வந்த துன்பம் எது என்றாலும் வாடி நிற்க வேண்டிய அவசியம் இல்லை.

சரி..

இப்போ நான் என்ன செய்யணும் சொல்லுங்க.. எனக்கு நல்ல ஆலோசனை சொல்லுங்க என்று கேட்கறீங்களா...?

முதலில் இறைவனை வணங்கி உங்கள் ஜாதகத்தை எடுங்கள்.. உங்கள் ஒரு ஜாதகத்தை மட்டுமே வைத்துக் கொள்ளாமல், இன்றைய கிரக நிலையை புரிந்து கொள்ளுங்கள்.

அத்துடன் ராசி, லக்கினம், திசை, புத்தி, மற்றும் இன்றைய கிரக நிலை என்பவற்றை எடுத்து வைத்துக் கொள்ளுங்கள்..

நம்பிக்கையோடு பின் தொடருங்கள்.... உங்களுக்கு வெளிச்சம் காட்ட காத்திருக்கிறோம்.. வாரம் தோறும் தொடர்ந்து படியுங்கள்..பால சோதிடம்.

# 2

நவகிரகங்கள் அத்தனை வலிமையானவையா? நம் வாழ்க்கையை புரட்டி போடும் அளவுக்கு சக்தி நிறைந்தவையா?

சூரியன் முதலான நவகிரங்கள் ஒன்பது என்பதை நாம் அறிந்து இருப்போம். இவற்றில் இரண்டு ஒலி கிரகங்கள், அவை சூரியன் சந்திரன் இவைகளை அந்த பக்கம் வையுங்கள்.

இவற்றில் இரண்டு இருள் கிரகங்கள் அவை ராகு மற்றும் கேது இவைகளை இந்த பக்கம் வையுங்கள்.

மீதமுள்ள ஐந்து கிரகங்கள், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன் வியாழன் இவைகளுடன் தான் பஞ்ச பூதங்களுடளான நமது வாழ்க்கை. அவை இருளோடும் ஒலியோடும் சேரும் போது ஏற்படுகிற மாற்றங்கள் தான் நமது வாழ்க்கை பயணம்.

எப்போதுமே ஒருவர் இருளிலேயே இருக்க முடியாது. அதே போல வெளிச்சத்திலேயே இருக்கவும் முடியாது. எந்த நாட்டில் இருந்தாலும் இருளும் ஒலியும், மாறிக் கொண்டே தான் இருக்கும். சூரியன் உதிக்கும் நேரம் தான் மாறுபடுமே தவிர, செயல்பாட்டில் மாற்றம் இல்லை..

அப்படியானால் இந்த கிரகங்கள் வலிமையானதா என்ற உங்கள் கேள்விக்கு காதில் விழுகிறது. கவனமாக கேளுங்கள்..

இந்த நவகிரங்கள் இறைவனின் ஆணைக்கு கட்டுப்பட்டு செயல்படும் ஒரு அலுவலர் போல. நமக்கு புரியும்படி சொல்ல வேண்டும் என்றால் செயல்படுத்தும் அலுவலர் (executing officer) அவ்வளவு தான். நீதிபதி ஒருவரை கைது செய்ய சொன்னால், கையில் ஆர்டருடன், கைது செய்து வருவார்கள். அவர்களிடம் எத்தனை மன்றாடினாலும், நீதிபதி ஆணையின்றி அவர்களால் எதுவும் செய்ய முடியாது.

இங்கே கைது செய்யும் அலுவலர் போல செயல்படுபவர்கள் தான் நவக்கிரகங்கள். இவர்களிடம் (எள்ளு பொட்டலும், செவ்வரளி மாலை என) வேண்டுதல்கள் வைத்தால், எந்த பயனும் கிடைக்காது. ஆணையிட்ட இறைவனிடம் தான் முறையிட வேண்டும். அவரால் மட்டும் தான் ஆணையை திரும்ப திருத்த முடியும் (order amendment).

கோவில்களில் கூட பாருங்கள் நவகிரகங்கள் கோவிலுக்கு வெளியில் உள்ள பிரகாரத்தில் தான் இருக்கும். அவைகளுக்கு கோவிலுக்குள் இடம் இல்லை.

வந்த பிரச்சனை எதுவாக இருந்தாலும் வழி நடத்தும் இறைவனிடம் தான் முறையிட வேண்டும். அப்போது தான் தீர்வு கிடைக்கும். பூட்டிய கதவை எத்தனை வேகமாக தட்டினாலும், அது திறக்காது என்ற உண்மையை புரிந்து கொள்ளுங்கள்.

என்னுடைய பிரச்சனையை கொஞ்சம் கேளுங்கள் .... அதற்கு என்ன தீர்வு சொல்லுங்கள்... என்று கேட்பவர்களே பொறுமையாக பின் தொடர்ந்து.. “வெளிச்சத்துக்கு வாருங்கள்..”.

ஆண்டவன் வழிபாட்டில் அடியொட்டி வாழ்ந்தால் நல்ல நாட்கள் தொலைவில் இல்லை என்பதை புரிந்து கொண்டு இந்த தொடரில் மனதை வையுங்கள். உங்களுக்கு தெளிவு கிடைக்கும் என உறுதியான நம்புகிறோம்.

நல்லதே நடக்கும்

# 3

ஒரு நல்லவர் எப்போதும் நல்லவராக இருக்க மாட்டார். ஒரு கெட்டவர் எப்போதும் கெட்டவராக இருக்க மாட்டார் என்பதை நாம் அனுபவத்தில் பார்த்து இருப்போம்.

ஒருவருடைய கெட்ட தன்மையும், நல்ல தன்மையும், அவரவர்களின் செயல்பாடுகளில் இருக்கிறது என்பது உண்மை தான் என்றாலும், அவரவர்கள் இருக்கும் நிலையை பொறுத்து இது அமையும் என்பதில் உங்களுக்கு மாற்று கருத்து இருக்காது இல்லையா.

இவர் என்ன சொல்ல வருகிறார் என்பதை யோசிக்கிறீர்கள். புரிகிறது. இப்போ பாருங்கள், பொதுவாக குரு கிரகம் இயற்கையில் சுபர் என்பது நம்மில் பலரும் அறிந்தது தான். ஆனால் மகர ராசி அன்பர்களுக்கு இவர் அசுபர் என்பதையும் தெரிந்து கொள்ளுங்கள்..

குரு சுப கிரகம் தானே என்று பொதுவான கருத்தை அல்லது சிந்தனையை வைத்துக் கொண்டு அணுகினால் முடிவுகள் தவறாகவே போயிடும். ஜாதகத்தில் ஒரு கிரகம் சுபத் தன்மை பெறுகிறதா? அல்லது அசுபத் தன்மை பெறுகிறதா என்பதை அந்த ஜாதகத்தில் உள்ள கிரக அமைப்பை வைத்து ஒரு சோதிடரால் தெளிவாக சொல்ல முடியும், எனும் போது, சுய மருந்து ஆபத்தானது என்பது போல நீங்களே ஒரு முடிவுக்கு வந்து விடுவது ஆரோக்கியமானது இல்லை அல்லவா.

கதவை தட்டுங்கள் திறக்கப்படும் என்றால் பூட்டிய கதவை தட்டி விட்டு திறக்க வில்லை என்று வருத்தப்படுவதால் என்ன பயன் கிடைக்கும் என்று நினைக்கிறீர்கள்.

பிரச்சனைகளின் பாரம் சுமப்பவர்களே, கொஞ்சம் இளைப்பாறுங்கள். பொதுவான இராசி பலன்கள் உங்களில் ஒரு சிலருக்கு மன ஆறுதல் தரலாம், ஆனால் அது அல்ல தீர்வு. உங்கள் பிரச்சனைகள் ஒருவருக்கு இருப்பது போல

இன்னொருவருக்கு இருக்காது. ஒவ்வொருவருக்கும் உள்ள பிரச்சனை தனித்தன்மையானது. அதற்க்கான தீர்வும் தனித் தன்மையானது.

ஒரு நோய்க்கு ஒரு மருந்து இல்லை. ஒரு மருந்துக்கு ஒரு நோய் இல்லை என்பது போல, ஒருவருக்கு உள்ள பிரச்சனைக்கு உள்ள ஒரு தீர்வு நிச்சயமாக இன்னொருவருக்கு இருக்க முடியாது. அதனால்,

சோதிடர்களும் மருத்துவர்களை போல தான். உங்கள் தனிப்பட்ட பிரச்சனைகளை ஆய்வு செய்து அதற்கு தீர்வு சொல்லுவார்கள். இறையருள் நிறைந்தவர்கள் சொல்லும் ஆலோசனைகள் உங்கள் மனதிற்கு மருந்தாக மட்டுமல்ல. உங்கள் வாழ்க்கைக்கும் உத்வேகம் தருவது போல இருக்கும்.

உங்கள் பிரச்சனைகளை அறிந்த நீங்கள் உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடரை அணுகி உங்கள் ஜாதகப்படி உள்ள பிரச்சனைகளையும் அதற்கான தீர்வுகளையும் தெரிந்து கொள்ளுங்கள்.

நம்பிக்கையோடு இருங்கள். உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடர் உங்கள் வாழ்வில் ஒளியேற்றி உங்களை "வெளிச்சத்துக்கு அழைத்து செல்வார்"

ஆண்டவன் வழிபாட்டில் அடியொட்டி இந்த தொடரை மனதில் பதித்து வையுங்கள். உங்களுக்கு தெளிவு கிடைக்கும் என உறுதியான நம்புகிறோம்.
நல்லதே நடக்கும்

# 4

“இரயிலில் பயணம் செய்தது உண்டா...?”

“அட அது என்னங்க சாரே இப்படி கேட்டுட்டீங்க..”.

“சிக்கு புக்கு ரயிலே....” என்று சிறு வயதில் விளையாடியதில் இருந்து இப்போ வரைக்கும் ரயில் பயணம் என்றால் ஒரு அலாதி இன்பம் தானே. சரி இந்த ரயில் பயணத்தை வைத்து தான் ஒரு செய்தி சொல்ல போறேன்.

இரயில் பெட்டியில் பயணம் செய்ய, ரயில் பெட்டி தேவை, அந்த பெட்டியை இழுத்து செல்ல ரயில் சக்கரம் தேவை, அந்த சக்கரம் சீராக உருண்டு செல்ல தண்டவாளம் தேவை, அந்த தண்டவாளம் இயல்பாக அமைய சமமான பூமி பாதை தேவை. இப்படி இருக்கும் போது தான் இரயில் பயணம் அமைய முடியும் இல்லையா...? அந்த ரயில் ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்கு அல்லது அடுத்த மாநிலத்திற்கு செல்ல முடியும் இல்லையா?

“ஆமாம்.. ஆமாம்...” என்று சொல்பவர்களே கொஞ்சம் சிந்தனையை உயர்த்தி பாருங்கள்..

சோதிடத்தில் ஒரு கிரகம் ஒரு ராசியில் இருந்து இன்னொரு ராசிக்கு செல்வது தான் கிரக பெயர்ச்சி..

இங்கே இருக்கிற ஒன்பது கிரகத்தில், ஒவ்வொரு கிரகத்தையும் 27 நட்சத்திரங்கள் தான் நகர்த்தி செல்லும்... அதனால் தான் நட்சத்திரத்தை பாதங்களாக பிரித்து சொல்லுவார்கள். ஒரு நட்சத்திரத்திற்கு நான்கு பாதங்கள் என்று பிரித்து வைத்து இருக்கிறார்கள் சோதிட அறிஞர்கள்.

ஒரு கிரகம் ஒவ்வொரு பாதமாக நகர்ந்து நான்கு பாதங்களை கடந்து அடுத்த நட்சத்திரத்திற்கு பயணமாகும். இது போல குறிப்பிட்ட நட்சத்திரங்களை கடந்து விட்டால், அது அடுத்த ராசிக்கு நகர்ந்து செல்லும். இந்த நகர்வை தான் கிரக பெயர்ச்சி என்று சொல்லுவார்கள்.

ரயில் பயணத்தில் இரவில் படுக்கும் போது தமிழ் பேசும் மாநிலமாக இருக்கும், தூங்கி விழித்தால் தெலுங்கு பேசும் மாநிலமாக இருக்கும். நம்மோடு பயணத்தில் இருந்தவர்கள் மாறி புதியவர்கள் நம்மோடு அடுத்த கொஞ்ச தூரம் பயணிப்பார்கள், ஒரு சில மணி நேரத்தில் நாம் புதிய மாற்றத்தை சந்திக்கும் படி இருக்கும் இல்லையா..?

இப்படி தான்.. ஒரு கிரக பெயர்ச்சி கிரக நிலைகள் மாறி நிற்கும் வாழ்க்கையில் மாற்றம் என புதிய அனுபவம் கிடைக்கும். இந்த கிரக பெயர்ச்சி பலன்கள் தான் நமக்கு என்ன செய்ய போகிறது என்ற ஆவலை ஏற்படுத்தி தரும்.

இந்த வகையில் இந்த ஆண்டு ஏப்ரல் மாதத்தில் வரும் இராகு கேது பெயர்ச்சி, அதை தொடர்ந்து வரும் குருபெயர்ச்சி என வரிசையாக வருகிறது.. அதற்கான ராசி பலனும் பால சோதிட இதழில் வருகிறது தொடர் வண்டி போல, தொடரினை விடாது படியுங்கள்.

சரி இந்த கிரக பெயர்ச்சி எனக்கு என்ன மாற்றம் செய்யும் என்ற ஆவல் எல்லோருக்கும் இருக்க தான் செய்யும். அதை தெரிந்து கொள்ள அடுத்த வாரம் வரை காத்திருங்களேன்.

உங்களை “வெளிச்சத்துக்கு அழைத்து செல்வது” தான் இந்த தொடரின் நோக்கம்.” இறை வழிபாட்டில் உறுதியாக நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்

# 5

“இரயில் பயணத்தில் சில ரயில் நிலையம் சீக்கிரம் வந்து விடும் சில பல மணி நேரம் கழித்து வரும்”

“சில ரயில் நிலையத்தில் வண்டி ரொம்ப நேரம் நிற்கும் சில ரயில்நிலையத்தில் சில மணி துளிகள் தான் நிற்கும்..”.

அதே போல எல்லா ரயில்களும் ஒரே மாதிரி தண்டவாளத்தில் ஓடினாலும், ஒரு சில ரயில் சூப்பர் பாஸ்ட், சிலது பாஸ்ட், சில ரயில்கள் பாஸ்ட் பெசன்ஜெர் சில கூட்ஸ் வண்டி இப்படி இதன் வேகம் இருக்கும்.

இது போல தான் ஒன்பது கிரகங்கள் இருந்தாலும், சில கிரகங்கள் நாள் கணக்கில், மாத கணக்கில், வருட கணக்கில் என ஒரு ராச்யில் இருந்து இன்னொரு ராசிக்கு இடம் மாறும் இதை தான் கிரக பெயர்ச்சி என்று சொல்கிறோம்.

இந்த கிரக பெயர்ச்சியும். சில கிரகங்கள் சீக்கிரமே நடந்து விடும் சனி பெயர்ச்சி குரு பெயர்ச்சி போன்றவை ஒரு ஆண்டுகளுக்கு பிறகு தான் நடக்கும்.

இப்போ தாங்க ஐயா இந்த கிரக பெயர்ச்சி புரிந்து விட்டது. இது என்ன பலன் தர போகிறது என்பதும் ஓரளவுக்கு புரிகிறது.. ஆனால் பாருங்க..

ரயில் செல்லக்கூடிய அடுத்த ரயில் நிலையம் எது என்று ரயில் அட்டவணையில் அல்லது ஆண்ட்ராய்டு ஆப் மூலம் தெரிந்து கொள்ள முடியும். ஆனால் இந்த கிரக பெயர்ச்சி நமக்கு என்ன பலன் தரப்போகிறது என்பதை எப்படி தெரிந்து கொள்வது?

இதை சொல்வதற்கு தான் ஜாதகம் என்ற அட்டவணை நமக்கு இருக்கு. இதில் பாருங்க. சந்திரன் என்ற கிரகம் பிறந்த ஜாதகத்தில் எந்த நட்சத்திரத்தில் இருக்கிறதோ அந்த நட்சத்திரம் எந்த ராசியில் வருகிறதோ அந்த கட்டத்தில் தான் சந்திரன் இருக்கும். அதை தான் நம்ம ராசி என்று சோதிடத்தில் சொல்லுவார்கள்.

நாமும் ராசிபலன் பார்ப்பதற்கும், கோவில்களில் அர்ச்சனை செய்யும் போதும், இந்த கோத்திரம், இந்த நட்சத்திரம் இந்த ராசி என்று சொல்லிக் கொள்வோம்.

இந்த ராசியை வைத்து தான் இந்த கிரக பெயர்ச்சி நமக்கு என்ன பலன் செய்ய போகிறது என்று பார்த்துக் கொள்வோம். ஆனால் பாருங்கள் இந்த அட்டவனையை சாதரனமாவர்களால் எல்லோருக்கும் படித்து தெரிந்து கொள்ள முடியாத நிலையில் இருப்பதால், இந்த அட்டவனையை படிக்க தெரிந்த, அதாங்க உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடர் உங்களுக்கு படித்து உங்களை அடையாளம் காட்டி தருவார்.

அந்த அருமையான சேவையை தான் பால சோதிட இதழில் வாரம் தோறும் பலன் அடைந்தவர்கள் சொல்கிறார்கள்.

ஏப்ரல் மாதம் தானே இராகு கேது பெயர்ச்சி வருகிறது என்று சோர்வாக இல்லாமல் இப்போதே நம்மை தயார் செய்து வைத்துக் கொண்டால் நாமும் வெளிச்சத்தை நோக்கி அடுத்த அடியை வைக்கலாம் தானே.

நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்

# - 6 -

“எங்கேயோ என்னமோ நடப்பது நம்மை எப்படிங்க ஐயா பாதிக்கும்?” என்று சிலர் பொதுவாக கேட்பது வழக்கம் தான்.

ஆனால் பாருங்க.. எங்கேயோ இடி சத்தம் கேட்கிறது. அது நமக்கு காதில் கேட்கிறது சில சமயம் பயமாக கூட இருக்கிறதே...

பக்கத்து வீட்டில் தீ பிடித்தால் நமக்கு கூட பயமாக தானே இருக்கிறது. கொரானா காலத்தில் பக்கத்து வீட்டில் தட்டி கட்டி நோட்டீஸ் ஒட்டி விட்டால் பயம் நமக்கு இல்லாமலா இருந்தது என்று யோசித்து பாருங்கள்.

அப்படின்னா இந்த கிரக பெயர்ச்சி கூட அப்படியா என்று சொல்ல வருகிறீர்கள் புரிகிறது.. இதில் கூடுதலாக சில செய்திகள் உள்ளது அதை சரியாக புரிந்து கொள்ளுங்கள். அதாவது அதிசார பெயர்ச்சி, ஒரு ராசி கட்டத்திற்கு குறிப்பிட்ட கால அளவுக்கு முன்பாகவே செல்வது, இயல்பு பெயர்ச்சி, இது சரியான கால அளவில் இடம் பெயர்வது, வக்கிர பெயர்ச்சி, இது ஒரு ராசி கட்டத்திற்கு பின்னோக்கி செல்வது.. இப்படி தான் இந்த ஆண்டு சனி அடுத்த சில மாதங்களில், அதிசார பெயர்சியாக பயணிக்கிறது..

ஒன்பது கோள்களில் தலைமை கோளாக சொல்லப்படும் சூரியன், மாதத்திற்கு ஒரு ராசியில் இருந்து அடுத்த ராசிக்கு பயணப்படுவதை தான் மாத பிறப்பு என்று சொல்கிறோம்.. சங்கராந்தி என்று பண்டைய வழக்கத்தில் சொல்லுவார்கள். மகர ராசியில் பிரவேசிக்கும் நாளை தான் மகர சங்கராந்தி அல்லது தைப் பொங்கல் என்று சொல்லுவார்கள்..

மேஷ ராசியில் சூரியன் பிரவேசிப்பதை தான் சித்திரை என்றும் தமிழ் வருட பிறப்பு, என்றும் கொண்டாடுகிறோம்.

இந்த கிரக பெயர்ச்சியில் இந்த வாரம் முக்கியமாக சொல்ல வருவது என்ன என்றால், ஆனியும், பங்குனியும் தான் .. அட அதில் என்ன விசேஷம் என்று கேட்கறீங்களா?

நாம் வாழ ஒரு இடம் தேவை. அது வாடகை வீடாக இருந்தால் தான் என்ன? கல்லை கொண்டு கட்டி வாழும் சொந்த வீடாக இருந்தால் தான் என்ன?

இப்போ எங்கே சார் கல்லை கொண்டு கட்டிடம், எல்லாம் ரெடிமேட் வீட்டிற்கு மாறியாச்சு (prefabricated house) என்று சொல்ல வருகிறீர்கள் சரி தான் கால சூழலுக்கு ஏற்ப நாமும் மாறிக் கொள்ள வேண்டியது தான்.

வாழும் இந்த வீடு மாறுவதை இந்த வாரம் சிந்திக்கலாம்.

“ஆனி” அடியிடேல், “குனி” குடிபுகல் என்பது சோதிட பழமொழி. இதில் சொல்ல வருவது என்ன என்றால், ஆனி மாதம் கடைக்கால் தோண்ட கூடாது கட்டிட வேலை தொடங்க கூடாது.

பங்குனி மாதம், கிரக பிரவேசம் போன்ற புதுமனை புகுதல் அல்லது வாடகை வீடாக இருந்தால் இடம் மாறுதல் கூடாது என்பது தான். இதெல்லாம் பழமொழி, அதை தூக்கி ஓரமாக வையுங்கள் என்று யாராவது சொன்னால்... அவர்களுக்கு தான் இந்த வார சிந்தனை.

அடிப்படையில் இரண்டு சோதிட விஷயத்தை தெரிந்து கொள்வோம். ஒன்று கோணம். இது 1-5-9 என்பது நமக்கு தெரிந்து இருக்கும். இதில் அறம் பொருள், இன்பம் வீடு என்று நான்கு கோணங்களை கருத்தில் கொண்டு சிந்திக்க வேண்டும்.,

மற்றது கேந்திரம் இது 1-4-7-10 என்பதை நாம் அறிந்து இருப்போம். கேந்திரம் என்பது இடம். இது ஆக்கல்(1-4-7-10), காத்தல்(2-5-8-11) அழித்தல்(3-6-9-12) என்ற கருத்தில் கொண்டு சிந்திக்க வேண்டும்.

இந்த கேந்திரத்தில் ஆக்கல் என்பது மேஷம்(1), கடகம்(4), துலாம்(7), மகரம்(10) ராசிகளையும்,

காத்தல் என்பது, ரிஷபம்(2), சிம்மம்(5), விருச்சிகம்(8), கும்பம்(11) ராசிகளையும்,

அழித்தல் என்பது, மிதுனம்(3), கன்னி (6), தனுசு(9), மீனம்(12) ராசிகளையும் குறிக்கும் என்று சிந்திக்க எடுத்துக் கொள்வோம்.

இதில் அழித்தல் என்ற வரிசையில் வரும் ராசிகளில் சூரியன் பிரவேசிக்கும் காலம், மிதுனம் - ஆனி , கன்னி-புரட்டாசி, தனுசு-மார்கழி, மீனம்-பங்குனி என்பதை இங்கே சொல்லாமலே புரிந்து கொள்ள முடியும் இல்லையா.

ஆக அழித்தல் தொழிலை குறிக்கும் ஆனி, புரட்டாசி, மார்கழி மற்றும் பங்குனி மாதங்களில் புதியதாக ஒன்றை தொடங்காமல் இருப்பது தான் நல்லது என்பதை தான் நமக்கு சொல்லி தந்து இருக்கிறார்கள் என்பதை புரிந்து கொண்டால் நன்மையே விளையும்.

ஒரு அழித்தல் நடக்க கூடிய இடங்களில் ஒன்றை ஆக்க நினைப்பது அறிவுள்ள செயல் அல்ல எனவே ஆனி, மற்றும் பங்குனி மாதங்களில் வீடு கட்ட கடைக்கால் போடுவதோ, கிரகபிரவேசம் செய்வதோ கூடாது என்பதை புரிந்து கொள்வது நல்லது அப்படி மீறி செய்தால், அது விருத்தி அடைவதற்கு பதிலாக அழிவுக்கு இட்டு செல்லும் என்பது எதிர்மறையாக உள்ளதால் மறைமுகமாக குறிப்பால் இப்படி சொல்லி இருக்கிறார்கள் என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

சோதிடத்தில் நான்காம் பாவகம் வீடு, மனை பற்றி குறிக்கும் பாவக காரகம், இதில் காலப்புருஷ ராசியான மேஷத்திற்கு , நான்காம் பாவகம் கடகம். இந்த கடகத்திற்கு 12ம் வீடு மிதுனம் இல்லையா.

இதில் கடகம் ஆக்கல் தொழிலை குறிக்கும் ராசி. மிதுனம் அழித்தல் தொழிலை குறிக்கும் ராசி.

எந்த ஒரு பாவகத்திற்கும் அதன் 12ம் பாவகம் விரைய பாவகம் என்ற அடிப்படையில், ஆக்கல் ராசியான கடகத்திற்கு விரைய பாவகமாக மிதுனம் என்ற அழித்தல் ராசி அமைவதால், சூரியன் மிதுன ராசிக்கு வரும் மாதம் ஆனி மாதத்தில் என்பதால் வீடு கட்ட கடைக்கால் போட கூடாது. இதை சொல்வதற்கு தான் ஆனி அடியிடேல் என்று சோதிட பழமொழியாக சொல்லி வைத்து இருக்கிறார்கள்.

இதே போல பங்குனி மாதத்திற்கும் என்பதை உங்கள் சிந்தனைக்கு விட்டு விடுகிறேன்.

ஒரு ஜாதகத்தில் குடும்பத்தில் கேது இருந்தால் அவர்கள் வீடு சந்துக்குள் இருக்கும் என்று சுலபமாக சொல்லி விடலாம். என்றாலும், வீடு என்பது வாழும் இடம் அது சிறப்பாக இருந்தால் மட்டுமே மன நிம்மதியுடன் மகிழ்ச்சி பொங்க வாழ முடியும். என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

கல்லும் மண்ணும் கலந்த கட்டிடத்தில் வாழ்வது இருப்பிடமாக இருக்கலாம், ஆனால் அன்பும், பாசமும் கலந்த இடம் தான் வாழ்விடம். அங்கே தான் மகிழ்ச்சியும், வளமும் பொங்கி பெருகும்.

உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடர் உங்களுக்கான காலத்தையும், சுப காரியங்கள் செய்யும் நாளையும் குறித்து தருவார். உங்களை வெளிச்சத்திற்கு அழைத்து செல்வார்.

நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்.

# - 7 -

“எப்படியோ இருட்டில் இருந்த எங்களை இப்படி வெளிச்சத்திற்கு கொண்டு வந்துட்டீங்க ஐயா” என்று குறுஞ்செய்தி அனுப்பி வாழ்த்து சொல்லும் அன்பு உள்ளங்களுக்கு நன்றிகள்..

நாம் என்ன தான் செய்தாலும், சில சமயம் நமக்கு கெட்ட பெயர் (அவப்பெயர்) வந்து விடுகிறது. அது குடும்பத்தில் இருக்கலாம், அல்லது அலுவலகத்தில் இருக்கலாம், அல்லது நண்பர்கள் மத்தியில் கூட இருக்கலாம்.

இது எல்லாத்திற்கும் காரணம் என்னன்னு நினைக்கறீங்க.. வாக்கு தான். அதாங்க பேச்சு.. சாதரணமாக எதேட்சையாக சொல்லி இருப்போம்.. அதை தவறாக எடுத்துக் கொண்டு நம்மை சண்டையில் மாட்டி விடும் அளவுக்கு கொண்டு போகும்.

முதல்ல இந்த வாக்கு எப்படி தோன்றுகிறது என்பதை நாம் புரிந்து கொண்டால், மற்றது சுலபமாகும். என்ன பேசணும், எப்படி பேசணும், எப்போ பேசணும், யாரிடம் பேச வேண்டும். ஏன் பேசணும், என்ற ஐந்து படி நிலைகளை வைத்து பேச பழகி விட்டால் தவறு தவறாக கூட வராது..

என்னங்க பேச கூட சொல்லி தரனுமான்னு கேட்கறீங்க புரிகிறது. இப்போ “அதுக்கு கூட தனியா வகுப்பு எடுத்துக் கிட்டு தானுங்க இருக்கோம்”, என்று சொல்பவர்களும் உண்டு

வாக்கு எப்படி அமைகிறது என்பதை தெரிந்து கொள்ளுங்கள். இது புதிய சிந்தனையாக கூட இருக்கும். வாக்கு என்பது காதினால் கேட்கும் ஒசையன்று, அவ்வோசை வழியே எழுந்து பொருள் உணர்வை உண்டாக்குகின்ற ஆற்றல் வாக்கு. சொற்கள் பொருட்களை பற்றுக் கோடாக கொண்டு தான் இயங்கும். இது வெளிப்படும்போது பேச்சாக அமையும்.

சொல் உலகத்தில், வாக்கு ஐந்து நிலைப்படும், அவை, சூக்குமை வாக்கு, பைசந்தி வாக்கு, மத்திமை வாக்கு, சூக்கும வைகரி மற்றும் தூல வைகரி என்று சாத்திரத்தில் சொல்லுவார்கள்.

அட ஒரு சொல்லை சொல்ல இத்தனை யோசனையா என்று சிந்திக்கிறீர்கள். புரிகிறது. உண்மை தான் திருக்குறளில் கூட

*"சொல்லுக சொல்லில் பயனுடைய சொல்லற்க*
*சொல்லில் பயன் இலாச் சொல்."*

என்று ஒரு குறளில் சொல் என்ற சொல்லை ஐந்து முறை பயன்படுத்தி இருப்பார் என்றால் ஆச்சரியமாக உள்ளது அல்லவா..!

அதனால் தான் ஞானிகள் அதிகம் பேசாமல் மௌனமாக இருப்பார்கள். நம்மில் பலர் மௌன விரதம் கூட வாரத்தில் சில நாட்கள் என கையால் எழுதி காண்பித்து விரதம் இருப்பார்கள்...

"*மோனம் என்பது ஞான வரம்பு*" என்று ஔவைப் பாட்டியும் சொல்லி இருக்கிறார். பாட்டி சொல்லை தட்டலாமா?

சாதாரணமாக சொல்லக் கூடிய ஒரு சொல், மற்றவர்களுக்கு அது தவறாக பதிந்து, உறவுகளே பிரிவுகளாகி விடும் நிலையும் வந்து இருப்பதை அவரவர் அனுபவத்தில் உணர்ந்து இருக்கலாம். சில தம்பதிகளின் மணமுறிவுக்கு கூட இது காரணமாக இருக்கலாம்.

சரி அப்போ எப்படி பேசுவது என்று கேட்க போறீங்க புரிகிறது. இத்தனை வயதுக்கு பிறகு எப்படி பேசுவது என சொல்லி கொடுக்க முடியுமா? அல்லது தெரிந்தோ தெரியாமலோ இப்படி பழகிய பிறகு நம்மை மாற்றிக் கொள்ளத்தான் முடியுமா?

அப்படின்னா...?

உங்க ஜாதகத்தில் பாருங்க.. "ல" என்று போட்டு இருக்கும் இது லக்கினம். இது தான் முதல் இடம். இதற்கு அடுத்த ராசி கட்டம் தான் இரண்டாம் இடம். இந்த

இரண்டாமிடம் தான் வாக்கு ஸ்தானம். இந்த வாக்கில் யார் இருக்கிறார்கள்? அல்லது இந்த வாக்குக்கு உரியவர் எந்த இடத்தில் யாருடன் இருக்கிறார் என்பதை வைத்து அவர் இயல்பாக எப்படி பேசுவார் என்பதை தெரிந்து கொள்ள முடியும்.

அவர் இயல்புக்கு மாறாக அப்படி பேசினால் அதை சீரியஸாக எடுத்துக் கொள்ள தேவையில்லை, அவரது இயல்பே அப்படி தான் என்பதை புரிந்து கொண்டு விட்டால், பிரிவும் இல்லை.. உறவும் நட்பும் நலமாகவே இருக்கும்.

ஒன்பது கிரகத்தில் இந்த வாக்கு ஸ்தானத்தில் ஒன்று அல்லது அதற்கு மேல் இருக்கும் அல்லது ஒன்றும் இல்லாமலும் இருக்கும். அங்கே இருக்கும், கிரகம் எந்த நட்சத்திரத்தின் காலில் நிற்கிறது என்பதை வைத்து இப்படி இந்த அடிப்படைகளை புரிந்து கொண்டால் ஜாதகர் என்ன பேசுவார். எப்போ பேசுவார், ஏன் பேசுவார், எப்படி பேசுவார், எதற்கு பேசுவார் என்பதை தெரிந்து கொள்ள முடியும்.

‘மனதில் உறுதி வேண்டும்’ என்று சொன்ன எட்டயபுரத்து எரிமலை, பாரதி, “வாக்கினிலே இனிமை வேண்டும்” என்றும் சொல்லி இருக்கிறாரே.

சரி, உதாரணமாக சில சொல்லவா...? (இது புரிந்தலுக்கு மட்டும் தான்) இரண்டாமிடத்தில் சனி இருந்தால், அவ்வளவு தான் போங்க.. என்று சொல்லும்படி இருக்கும்.

சூரியன் செவ்வாய் சம்பந்தத்துடன் இருந்தால், அவர்கள் பேச்சு கடுமையும், கொடுமையும் கொண்டதாக இருக்கும். அடுத்தவர்கள் மனம் கோண பேச இவர்களால் மட்டுமே முடியும் என்று சொல்லி விடலாம்.

இரண்டாமிடத்தில் புதன் இருந்தால், தேன் ஒழுக பேசினாலும் பேச்சில் பயனில்லை.

கேது இருந்தால், ஆரோக்கியமில்லை. தான் என்றாலும் கேது குரு நட்சத்திரத்தில் இருந்தால் அதன் சிறப்பின் அளவை சொல்லத்தான் வேண்டுமா? அது தெய்வ வாக்கு தான் போங்க..

இப்படி இந்த இடத்தில், நிற்கும் கிரகம், ஸ்தானாதிபதி, கிரகம் நின்ற நட்சத்திர சாரம் என்பதை வைத்து அவர் பேச்சு எங்கே தொடங்கி எங்கே முடியும் என்பதை தெரிந்து கொள்ள முடியும்.

இரண்டாமிடம் வாக்கு மட்டுமல்ல, தனம், குடும்பம், கல்வி, அதிர்ஷ்டம் என பல காரகத்துவம் பெற்ற பாவகம் என்றாலும் இந்த வாரம் வாக்கு பற்றி சிந்திக்க எடுத்துக் கொண்டோம்.

அடுத்த ஒரு வாய்ப்பில், மற்ற காரகங்களை சிந்திக்க எடுத்துக் கொள்ள திருவருள் துணை செய்யும். உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடர் உங்களை நல்வழி படுத்துவார்

நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்.

# - 8 -

ஒரு பாவகத்துக்கு (லக்கினத்தில் இருந்து எண்ணி வருகிற கட்டம்) ஒரு காரகத்துவம் (portfolio) இல்லை என்பதை முதலில் புரிந்து கொள்ளுங்கள்.. ஒரு பாவகத்திற்கு பல காரகத்துவம் உண்டு. எது தொடர்பாக ஜாதக ஆய்வு செய்கிறோமோ அதை வைத்து அதனை பொருத்தி பார்த்து பலன் தெரிந்து கொள்ள வேண்டும். அவ்வளவு தான்.

கடந்த வாரம் இரண்டாம் பாவகம் பற்றி சிந்தித்தோம். அதில் வாக்கு பற்றி சிந்தனைகளை பகிர்ந்தோம்..வாக்குக்கு மட்டும் அந்த பாவகம் இல்லை என்பதை தெளிவாக புரிந்து கொள்ளுங்கள்..

“அப்படின்னா..!?”

இந்த இரண்டாம் பாவகம், பண வரவையும் சொல்லும் கையிருப்பு பணம் பற்றியும் சொல்லும், உடலுக்கு தேவையான கலோரி, உடல் பருமன், உணவு, வாழ்க்கை துணையின் மரணம் இப்படி நிறையா சொல்லிக் கொண்டே போகலாம்..

அதனால் தான் எந்த நிற கண்ணாடியில் நமது பார்வை பதிகிறதோ, அந்த நிறத்தில் தான் பொருட்கள் தெரியும், பச்சை நிற கண்ணாடி போட்டு பார்த்தால் பார்ப்பவை யாவும் பச்சையாக தெரியும், அதுவே மஞ்சள் நிற கண்ணாடி என்றால் மஞ்சளாக தெரியும்.

ஒருவரே வீட்டில் குடும்ப தலைவர், அலுவலகத்தில் மேலாளர், வங்கியில் வாடிக்கையாளர் வண்டி ஓட்டும் போது டிரைவர் என்று ஒருவரே பல நிலையில் இருப்பது போல என்பதை புரிந்து கொண்டால் இதை புரிந்து கொள்வது சுலபம்.

அப்படின்னா இந்த வாரம் என்ன சொல்ல போறீங்க என்று கேட்க வரும் உங்கள் ஆர்வம் புரிகிறது.

நெல்லை மாவட்ட வட்டாரத்தில் சேக்காளி (சேக்காளி-நண்பன்) சரியாக இருந்தால் எல்லாம் சரியாக தான் வரும் என்று சொல்லுவார்கள்.. “tell me your friend; I will tell about you” என்று ஆங்கிலத்தில் சொல்லுவார்கள்..

இந்த நண்பர்களை அடையாளம் காட்டி சொல்லுவது ஏழாம் பாவகம். இந்த ஏழாம் பாவகத்தை வாழ்க்கை துணை, கூட்டாளி, தொழில் முறை பங்காளி என பல நிலைக்கும் சொல்லுவார்கள்.. அதை இன்னொரு வாய்ப்பில் சிந்திக்கலாம்.

என்னங்க நண்பர்களை ஜாதகம் வைத்து சொல்ல போறீங்களா என்று யோசிக்கிறீர்கள். புரிகிறது. நம்மை வழி நடத்தி செல்வதில் முதல் இடம் நண்பருக்கு தான் உண்டு..

காதலன்-காதலி என்ற உறவுகள் கூட இப்படி தான். நண்பருக்காக எதை செய்ய வேண்டும். என்ற நிலையில் இருந்தாலும், நமக்கு நண்பர்கள் என்ன செய்வார்கள் என்ற ஏக்கமும் எதிர்பார்ப்பும் இல்லாமலா இருக்கும்?

சரி இதை எப்படி தெரிந்து கொள்வது?

இப்போ பாருங்க, சிலருக்கு, மாற்று மதத்தினர் பலரே நண்பர்களாக இருப்பார்கள் அவர்களால் ஆதாயமும் பெறுவார். ஒரு சிலருக்கு நண்பர்களால் விரயமும் நம்பி ஏமாறும் நிலையம் இருக்கும். இது அதுக்கும் உண்டு..

காதலையும், வாழ்க்கை துணையும், வியாபார துணையை யும் மட்டும் தெரிந்து கொண்டால் போதுமா? அப்போ இதை தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம் இல்லையா?

உங்கள் ஜாதகத்தில் பாருங்கள் குருவுக்கு பக்கத்தில் யார் இருக்கிறார்கள் என்று...

.அவ்வளவு தான் உங்கள் நண்பர்களை நீங்களே தெரிந்து கொள்ளலாம்.. சுலபமாக புரிந்து கொள்வதற்காக இப்படி சொல்கிறேன் சரியாக உள்ளதா சொல்லுங்கள்..

ஒரு இந்து மதத்தை சேர்ந்த ஒருவருக்கு, குருவுக்கு இரண்டாம் இடத்தில் ராகு இருந்தால், அவருக்கு கிருத்துவ மத நண்பர்கள் அதிகம் இருப்பார்கள், அதிகம் உதவுவார்கள்.

அப்போ ஜாதகர் கிருத்துவ மதத்தை சேர்ந்தவராக இருந்தால் என்று விதண்டா வாதமாக கேட்டாலும் சோதிடத்தில் பதில் சொல்ல முடியும் என்பதை புரிந்து கொள்ளுங்கள்..

அவர்களுக்கு கிருத்துவ நண்பர்கள் மட்டுமே இருப்பார்கள் அவர்கள் மற்ற மதத்தினரை நம்ப மாட்டார்கள் என்பதையும் தெரிந்து கொள்ளுங்கள்.

ஐயா, எனக்கு குருவுக்கு இரண்டாம் இடத்தில் யாருமே இல்லையே என்று யாரும் வருத்தம் கொள்ள தேவையில்லை. அது போன்ற அமைப்பு உள்ளவர்களுக்கு நண்பர்களால் ஆதாயம் இல்லை என்பதை புரிந்து கொள்ளுங்கள்..அவர்கள் self dependant ஆக இருப்பார்கள். அப்படி இருந்தால் அவர்களுக்கு நன்மையே விளையும்.

குருவுக்கு இரண்டாம் இடத்தில் மற்றும் பன்னிரெண்டாம் இடத்தில் உள்ள கிரகத்தை வைத்து ஜாதகருக்கு உதவுபவர், மற்றும் மற்றவர்களுக்கு உதவும் ஜாதகர் என்பதை வைத்து புரிந்து கொள்ளலாம்.

இதே போல ஒன்றுக்கு மேற்பட்ட கிரகம் இருந்தாலும், அதன் தன்மையை வைத்து அவர்களின் நண்பர்களையும், அதனால் வரும் இயல்பினையும் சொல்லிவிட முடியும்.

நண்பர்களின் உறவை மேலிட்டு காட்டும் பல திரைப்படங்கள் உங்கள் கண் முன் நிழல் ஆடுகிறதா...?

இது எளிமையாக புரிந்து கொள்வதற்காக தான் இதை சொன்னது. இதே போல லக்கினத்திற்கு ஏழாம் பாவகம் இதன் தன்மையை தெளிவாக காட்டிவிடும்.

லக்கினத்திற்கு ஏழாம் இடத்தில் சனி இருந்தால், அந்த ஜாதகருக்கு நண்பர்கள் தன்னை விட வயது கூடியவர்களாகவும், அனுபவம் நிறைந்தவர்களாகவும் நண்பர்களாக இருப்பார்கள்.

குரு இருந்தால், அறிவில் சிறந்த ஒழுக்க சீலர்கள் நண்பர்களாக இருப்பார்கள்..

இராகு இருந்தால், கொஞ்சம் “அது” சாப்பிடுவதில் அலாதி பிரியம் உள்ளவர்களாகவும், கூடவே செவ்வாயும் சேர்ந்து விட்டால், கொஞ்சம் கூடுதலாக சாப்பிடுபவர்களாகவும் இருப்பார்கள்.

வெளிப்படையாக புரிந்து கொள்ளுங்கள். நண்பர்களை நாம் தேடி பிடிப்பதில்லை. நட்பு என்ற உறவு தானே நம்மை வந்து அடைந்து விடும். தெரிந்தோ தெயரியாமலோ, நாமும் அதன் வழியே தான் செல்வோம்.

அதனால் தான் வேறு எதற்கும் இல்லாமல் அதிக பட்சமாக நட்பை பற்றி திருக்குறளில் மட்டும் 31 அதிகாரங்களில் 310 குறட்பாக்களை வடித்து தந்து இருக்கிறார் திருவள்ளுவர்.

இத்தனை சிறப்பான நட்பை பற்றி ஔவை பாட்டி மட்டும் சொல்லாமல் இருப்பாரா என்ன? “***நல்லாரைக் காண்பதுவும் நன்றே***” என்ற மூதுரை பாட்டை அசை போட்டு பாருங்கள்.

காதல் இல்லாமல் வாழ்ந்து விட முடியும், கல்யாணம் இல்லாமல், குழந்தைகள் இல்லாமல் கூட வாழ்ந்து விட முடியும். ஆனால் நண்பர்கள் இல்லாமல் வாழவே முடியாது.

அதுவும் நம்மை நம்முடைய உணர்வுகளை புரிந்து கொண்டு நடக்கும் நண்பர்கள் கிடைத்து விட்டால் வேறு என்ன வேண்டும் என்று நினைக்கிறீர்கள்..

நல்லதே நடக்கும். நம்பிக்கையுடன் இருங்கள்.

“வெளிச்சத்திற்கு வாங்க” என்ற இந்த தொடரில் அவ்வப்போது, திருக்குறளை மேற்கோள் காட்டுகிறீர்கள், ஔவையார் பாடலை சுட்டி காட்டுகிறீர்கள். பண்டைத் தமிழை அடிக்கோடிட்டு கருத்து சொல்கிறீர்கள்..

தமிழுக்கும் சோதிடத்திற்கும் அப்படி ஏதாவது தொடர்பு இருக்குதான்னு தெரிந்து கொள்ள ஆவலாக இருக்கிறோம் என்று சிலர் கேட்கிறார்கள்.. அவர்களுக்காக தான் இந்த வார சிந்தனை.

“நன்றும் தீதும் பிறர் தர வாரா” என்ற பாடலை தந்தவர் கணியன். பூங்குன்றனார் என்பதை பலரும் தெரிந்து இருக்கலாம். இதில் கணியன் என்று சொல் சோதிடத்தை கணிப்பதால் அவரை கணியன் என்று சொல்வதாக சொல்லுவார்கள். டாக்டர் பெயருக்கு முன் Dr. என்று போட்டுக் கொள்வது போல, பொறியாளர் “Er” என போட்டுக் கொள்வது போல ஆடிட்டர் “CA.” என்று போட்டுக் கொள்வது போல, சோதிடர்களுக்கும் கவுரவமாக இருந்த அந்த காலத்தில், எதிர்காலத்தில் வருவதை முன்பே கணித்து சொல்வதால், “கணியன்” என்று பெயரடை (adjective) சேர்த்து சொல்லுவார்கள்.

இப்படி தமிழ் சோதிடர்களை தமிழ் போற்றி இருக்கிறதே, அப்போ தமிழை விட்டுவிடவா முடியும் என்று நினைக்கிறீர்கள். “தமிழ் இல்லாத பாரதம் தலை இல்லாத உருவம் போல” என்று சொல்லியா தெரியவேண்டும்.

அதெல்லாம் சரி, தமிழ் இலக்கியத்தில், அல்லது அற நூல்களில் சோதிடம் இருக்கிறதா என்று வாதம் செய்ய நினைப்பவர்களே தொடர்ந்து படியுங்கள், சில குறிப்புகளை தருகிறேன், குறித்துக் கொள்ளுங்கள்.

சைவத் திருமுறைகளில் பன்னிரெண்டாம் திருமுறையாக வைத்து போற்றப்படுவது சேக்கிழார் அருளிச் செய்த பெரியபுராணம்.அதில் பிள்ளை பாதி புராணம் பாதி என்று சொல்வது போல அதிகமான பகுதிகளைக் கொண்டது

திருஞானசம்பந்தர் புராணம். அதில் சம்பந்தர் பெருமான் அவதாரத்தை சொல்ல வரும் பாடலை தருகிறேன், சுவைத்து தான் பாருங்களேன்.

**" அருக்கன் முதல் கோள் அனைத்தும் அழகிய உச்சங்களிலே**
**பெருக்க வலியுடன்கிறகப் பேணியா நல் ஓரை ழத் திருக்கிளரும்**
**ஆதிரைநாள் திசைவிளங்கப் பரசமயத்**
**தருக்கொழியச் சைவமுதல் வைதிகமும் தழைத்து ஓங்க.**

இந்த பாடலில் அருக்கன்-சூரியன் முதல் அனைத்து கோள்களும் நல்ல பலனை தரக்கூடிய உச்சத்தில் இருக்க, திருவாதிரை நட்சத்திரத்தில், நல்ல ஓரையில் என்ற சோதிட குறிப்பை காண முடிகிறது அல்லவா..

சில மணி நேரம் கழித்து பிறந்தால், பிறக்கும் குழந்தை அரசு ஆள்வார் என்று சோதிட குறிப்பை கேட்டு கமலவதியார், கோட்செங்க சோழனை பெற்று எடுத்த செய்தியும் காண முடியுமே.

**பழுதிலா மறை கண்ட நூல் பழு தின்றி உண்டது பாரின்மேல்**
**“மொழிவர் சோதிடம்” உன்னி இன்னது முடிமென்பது முன்னமே அழிவிலாதது கண்டனம் அவை யன்றியுஞ் சில ஆகமங்களின்**
**எழுதியோர்படி என்று கொண்டு இரு நிதி எடுப்பதும் எண்ணிடே**

மெய் கண்ட சாத்திரங்களுள் தலையாய சாத்திரமான சிவஞான சித்தியார் அருளிச் செய்த அருள் நந்தி சிவாச்சாரியார் அருளிச் செய்த நூலில் காணலாம்.

திருக்குறளில் சோதிட சிந்தனை உள்ளதா என்று தானே அடுத்து உங்களுக்கு கேட்க தோன்றும்.

**புறம்குன்றி கண்டு அனையரேனும் அகம்குன்றி**
**மூக்கின் கரியார் உடைத்து.**

இந்த குறளில் எங்கே சார் சோதிடம் இருக்கிறது என்று இயல்பாக படிப்பவர்கள் கேட்கலாம். கொஞ்சம் ஆழ்ந்து சிந்தியுங்கள்.. மூக்கு என்பது குருவை

குறிக்கும். கரி என்பது சனியை குறிக்கும். குருவில் சனி இருந்தால்... இதற்கு விளக்கம் சொல்லித்தான் ஆக வேண்டியது இல்லை.

மூக்கில் கரி குருவில் சனி என்பதாக சிந்தித்து பாருங்கள் சோதிட கருத்தை திருக்குறள் சொல்லி இருக்கிறது என்பது புரியும்.

இதே போல,

**உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்**
**பாம்போடு உடன் உறைந் தற்று**

இந்த குறளில், குடம் என்பது கும்ப ராசியையும், பாம்பு என்பது சர்ப்பி கிரகமான ராகுவையும் குறிக்கும். கும்ப ராசியில் ராகு வந்தால், பலன் எப்படி இருக்கும் என்பதையே குறளின் பொருளாக வைத்து சிந்தித்து பாருங்கள். சோதிட சிந்தனைகளை திருக்குறளில் உள்ளது என்பதை புரிந்து கொள்ள முடியும்.

இது உதாரணத்திற்காக சொல்லப்பட்டவைகள் தான் இது போல சோதிட சிந்தனைகளை சொல்லும் பல குறட்பாக்களை எடுத்து காட்ட முடியும்.

**காய்சின வெய்யோன் சேயோன் முன்செலக் கதிர்கால் வெள்ளித்**
**தேசிகன் பின்பு சென்று நடக்குமிச் செயலான் முந்நீர்த**
**தூசின வுலகிற் பன்னீ ராண்டுவான் சுருங்கு மென்று**
**பேசின நூல்கள் மாரி பெய்விப்போற் சென்று கேண்மின்** (1195)

என்ற திருவிளையாடல் புராணத்தை எடுத்துக் கொண்டால், சூரியனும், செவ்வாயும் முன்னே செல்ல சுக்கிரன் பின்னே தொடரும் போது, பன்னிரெண்டு ஆண்டுகள் மழை பெய்யாது என்ற சோதிட குறிப்பை சொல்கிறது என அறியும் போது வியப்பாக உள்ளது அல்லவா?

**அலங்கன்மலி வானவரும் தானவரும் அலைகடலைக் கடையப்பூதம்**
**கலங்க எழுகடுவிடம் உண்டு இருண்டமணிகண்டத்தோன் கருது கோயில்**
**விலங்கல் அமர் புயன்மறந்து மீன் சனிபுக்கு ஊன்சலிக்கும்காலத்தானும்**
**கலங்கலிலா மனப்பெருவண் கையுடைய மெய்யர்வாழ் கழுமலமே.**

என்பது திருஞானசம்பந்தர் அருளிய முதல் திருமுறை. மழை வேட்டல் பதிகம் என்று சைவ பெருமக்களால் உயர்வாக போற்றப் படும் இந்த பதிகத்தில் மகரத்தில் சனி புகும் காலத்தால் ஏற்படும் சிக்கலை கழுமலம் என்று சொல்லும் சீர்காழி பெருமானை வழிபாடு செய்ய அது தீரும் என்பதாக சோதிட குறிப்பினை பதிய வைத்து உள்ளது வியப்பாக உள்ளது அல்லவா.

**எங்கும் நல் நிமித்தம் செல்ல இரு நிலம் மகிழ்ச்சி கூர**
**பங்குனி நிறைந்த திங்கள் ஆதபன் பயிலும் நாளில்**
**வெம்குனி வரிவில் வாகை விசயனும் பிறந்தான் என்றி**
**பங்குனன் என்னும் நாமம் பகுதியால் படைத்திட்டானே**

என்பது வில்லிபுத்தூர் ஆழ்வார் அருளிய பாரதம். இந்த பாடலில், பங்குனி மாதம் உத்திர நாளில், அர்ச்சுனன் பிறந்தான் என்று சோதிட குறிப்பை சேர்த்தே பதிவு செய்து இருப்பது நம்மை இன்னமும் வியக்க வைக்கிறது அல்லவா.

இப்படி தான் புராணங்கள் சங்க இலக்கியங்கள் என அனைத்திலும் ஆங்காங்கே சோதிட குறிப்புகள் இருக்கிறது. சோதிட கண் கொண்டு இந்த பாடல்களை படிக்கும் போது, நம்மை அறியாமலே வியப்பு உண்டாவதில் ஆச்சரியமில்லை.

அதனால், சோதிடம் முன் தோன்றி மூத்த குடி என்று சொல்லும் தமிழில் தான் உள்ளது என்பதை புரிந்து கொண்டு, தமிழை தொடாமல் சோதிடம் சொல்ல முடியாது என்ற நம்பிக்கையுடன் அணுகுங்கள்.

நல்லதே நடக்கும். நம்பிக்கையுடன் இருங்கள்.

# - 10 -

தங்கம் ... தங்கமே தங்கம்...

அட ஆமாங்க தங்கம் பாருங்க ... விலை கூடிக்கிட்டே போகுது... தங்கத்திற்கு காரகம் வகிக்கும் குருவும் மீனத்திற்கு பெயர்ச்சியாகியாச்சு. அப்போ இன்னும் தங்கம் விலை கூடுமான்னு யோசிக்கிறீங்க புரிகிறது.

தங்க நகைகள் வாங்குவது முதலீடா இல்லையா என்று சொல்ல போவதில்லை. இப்போ அநேகமாக காதல் கல்யாணம் என்றாகிவிட்டது எனபதால்`என்பதால் கல்யாணத்திற்கு தங்கம் வாங்கி சேமிப்பது என்பது மக்களிடையே குறைந்தும் போச்சு.

அப்படின்னா...

கமாடிட்டி மார்கெட்டில் கோல்ட் அல்லது மினி கோல்ட் வாங்க ஆலோசனை சொல்ல போறீங்களா என்று பார்க்கறீங்க..

கழிவுகள் எல்லாம் போய் கடைசியில் தங்குவது தானே தங்கம். அப்போ அது செல்வ வளம் தரும் பொருள் தானே.. தங்கத்திற்கு காரகம் குரு அல்லவா. அதனால் தான் தங்கத்தை இடுப்புக்கு கீழே போட கூடாது என்று சொல்லுவார்கள்.

குருவை மதிக்காத சிலர், அல்லது, அறியாமையின் காரணமாக காலில் கொலுசு, மெட்டி என தங்கத்தில் போட்டு தங்கள் பெருமையை அடித்துக் கொள்வதாக நினைத்துக் கொண்டு வறுமையை விலைக்கு வாங்குகின்றனர்.

“கால் பொன் ஆனாலும் மா பொன்” என்பது கிராமத்து பக்கம் சொல்லும் சொல்லடை தான். இத்தனை செல்வ வளம் மிக்க ஒரு வஸ்துவை இடுப்புக்கு கீழே காலில் போட்டு அவமரியாதை செய்யலாமா? கூடாது.

அதனால் தான் இன்றைய இளைய செல்லங்களுக்கு இதன் மூலமாக சொல்லி அவர்களை நல்வழி படுத்துவோம். தங்கத்தை எப்போதும், இடுப்புக்கு கீழே போட கூடாது.

சரி அப்படி போட்டால் என்ன ஆகும் என்பதை இன்னொரு சந்தர்ப்பத்தில் சிந்திக்கலாம். இப்போ தங்கத்தின் உயர்வு நிலையை பற்றி மட்டும் சிந்திப்போம்.

அது சரி இப்போ எதுக்கு தங்கத்தை பத்தி சொல்றீங்க.. என்று யோசிக்கிறீர்கள் புரிகிறது.

தங்கம் வாங்கும் நாள் என்றால் இன்றைய நாளில் மக்களுக்கு நினைவில் வருவது அக்ஷய திருதியை தானே. அது இந்த வருடம் மே மாதம் 3ம் தேதி வருகிறதே.

அட.. ஆமாம்..!! என்று பஞ்சாங்கத்தை பார்த்து விட்டு, உங்கள் மனதில் அலை பாயும் எண்ணங்களை அறிகிறோம்.

ஒலி கிரகமான சூரியனும் சந்திரனும் உச்சத்தில் இருக்கும் நாள் தான் அக்ஷய திருதியை. குறிப்பாக இந்த அக்ஷய திருதியை ரோகினி நட்சத்திரத்தில் வந்தால் அதன் சிறப்பும் அது தரும் செல்வ வளமும் சொல்ல ஒரு குட்டி பட்டியலே போடலாம்.

இந்த ஆண்டு மே மாதம் 3ம் தேதி வரும் அக்ஷய திருதியை அமிர்த யோகத்தில் ரோகினி நட்சத்திரத்தில் வருகிறது. அதனால் வழிபாடு செய்யக் கூடிய இந்த புனித நாளில்....., (நாம் தங்கம் வாங்கித்தான் ஆக வேண்டுமா என்று கேட்க போறீங்க...)

ஆடி மாதம், செவ்வாய் கிழமை என சில குறிப்பிட்ட நாட்களில் தங்கம் வாங்க மாட்டார்கள். ஆடித்தள்ளுபடி, செவ்வாய் கிழமை சிறப்பு தள்ளுபடி என்றால் மக்கள் முதல் வரிசையில் நிற்காமல் இருப்பதில்லை. அதனால் வரும் சிக்கலும் சிரமும் வந்த பிறகு தானே தெரியும்.

“சுண்டைக்காய் கால் பணம்.... சுமை கூலி முக்கால் பணம்” என்பது போல, சில நூறு அல்லது ஆயிரங்களை சேமிக்க பல லட்சங்களை இழக்கலாமா?

சம்பத்துக்கள் சேர அக்ஷய திருதியை அன்று தானம் செய்ய வேண்டும். சிலருக்கு பாருங்கள் செல்வ வளம் இருக்கும். ஆனால் அனுபவிக்க கூடிய

சௌபாக்கியம் இருக்காது. "ஆயிரம் இருந்தும்... வசதிகள் இருந்தும்.... no peace of mind" என்பது போல இருப்பார்கள். இதை தான் சௌபாக்கியம் என்று சொல்லுவார்கள் ஜனன ஜாதகத்தில் 11ம் இடத்தை வைத்து இதை தெரிந்து கொள்ளலாம்.

சம்பத்துக்கள் சேரவும், சௌபாக்கியம் கூடவும் அக்ஷய திருதியை அன்று தானம் செய்ய வேண்டும். இவர்கள் தானம் செய்வதற்கு தான் தங்கமும் வெள்ளியும் அக்ஷய திருதியை அன்று வாங்க வேண்டுமே தவிர
தங்கத்தையும் வெள்ளியையும் வாங்கி பீரோவில் வைத்து பூட்டி வைக்க அல்லது பின்னாளில் விற்றுக் கொள்ள முதலீடாக என தங்கம் வாங்குவதற்கு வந்தது அல்ல இந்த புனிதமான அக்ஷய திருதியை என்பதை முதலில் புரிந்து கொள்ளுங்கள்.

நமக்கே இல்லீங்க ஐயா, நாம் எங்கே தானம் செய்வது?!. தானம் செய்வது நல்லது தான் என்றாலும் சத் புருஷர்களை பார்ப்பது அரிதாக உள்ள இந்த கலியில் எங்கே தானம் செய்வது என்ற சிந்தனையும் நம் மனதில் வராமல் இல்லை.

சத் புருஷர்கள் இன்னமும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்கள் நம் பார்வைக்கு தென்படவில்லை என்றால், நமது தவ வலிமை குறைவு என்பது தான் பொருளே அன்றி சத் புருஷர்கள் இல்லை என்பது அல்ல பொருள் என்ற பாசிடிவ் கருத்தை மனதில் வரவைத்துக் கொள்ளுங்கள்.

சரி தங்கம் வெள்ளி வாங்க வசதி இல்லை. அல்லது தானமாக தருவதற்கு வசதியோ, மனமோ, வீட்டில் திட்டுவார்களே என்ற பயமோ இருந்தால் என்ன செய்வது.?

முடிந்தவரை நீர் பொருளை தானம் செய்யுங்கள், பானகம், நீர் மோர் அல்லது வெறும் தண்ணீர் இப்படி எதையும் தானமாக தரலாம். இதை சத் புருஷர்களுக்கு தான் என்று இல்லை யாருக்கும் தரலாம். அதில் பேதம் காட்ட வேண்டிய அவசியமில்லை.

நீர்மை பொருளுக்கு காரகம் சந்திரன். அக்ஷய திருதியை நாளில் சந்திரன் உச்சம் எனும் போது அதற்கான கழுவாய் இதுவாக தானே இருக்கும்.

சூரியன் உச்சமாக இருப்பதால், அவர்களை உபசரித்து அன்னம் பாலித்து பசியாற செய்ய வேண்டும். வசதி இல்லாதவர்கள் பானகம் நீர் மோர் கரைத்து தர

வேண்டும் அதுவும் இல்லாதவர்கள் தண்ணீராவது (பண்டைய நாளில் தண்ணீர் பந்தல் வைப்பார்கள்) தர வேண்டும். உங்கள் அலுவலகத்தில் வீட்டு வாசலில் அதிக செலவு இல்லாமல் ஒரு பானையில் தண்ணீர் வைத்து தர முடியும் தானே.

அக்ஷய திருதியை, கோடை காலத்தில் வருவதால், இது போல சொல்லி இருக்கலாம் என்று கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் நினைத்துக் கொள்ளட்டும் பரவாயில்லை. ஆனால் இதை செய்யட்டும் என்பது தான் நமது எண்ணமும் விருப்பமும்.

எந்த ஒரு செயலை செய்வதற்கும் நமக்கு தேவை தண்ணீர் தான். அதனால் தான், மத சடங்குகளில் நீருக்கு முக்கியத்துவம் உண்டு.. "புண்ணியம் செயவாருக்கு பூ உண்டு நீர் உண்டு" என திருமந்திரம் சொல்கிறது. தண்ணீரை கையில் வைத்துக் கொண்டு அதை crystalise செய்தால், நமது உணர்வுகள் அதில் வெளிப்படும் என்பது ஆய்வாளர்கள் கருத்து.

அதனால், இந்த ஆண்டு, மே மாதம் 3ம் தேதி வரும் அக்ஷய திருதியை அன்று தங்கம் வெள்ளி வாங்க விரும்பினால் அதை தானம் செய்வதாக இருந்தால் அதற்கு மட்டும் வாங்கி கொள்ளுங்கள். உங்கள் உபயோகத்திற்கு தான் என்றால் உங்களுக்கு விருப்பமான மற்ற நாட்களில் வாங்கிக் கொள்ளுங்கள்.

யாராக இருந்தாலும், பானகம், நீர்மோர் அல்லது தண்ணீர் பந்தல் என எது உங்கள் வசதிக்கு முடியுமோ அதை செய்யுங்கள்.

நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்.!

# - 11 -

வீட்டிற்கு ஒரு மரம் வளர்ப்போம்..!!

இல்லை.. இல்லை..

ஆளுக்கு ஒரு மரம் வைக்க வேண்டும் என்று தான் ஆசை சிலருக்கு வீட்டுக்கு பக்கத்தில் ஒரு தோட்டம் வைத்து என்று கனவு இருக்கும். சிலருக்கு சின்னதாக இடம் வாங்கினால் கௌரவ குறைச்சல் என்று வாங்காமல் இருந்து விடுவார்கள். வசதி நிறைந்தவர்கள் பெரியதாக இடம் வாங்கினால் அதை வைத்து பராமரிப்பது சிரமம் என்று பேசாமல் இருந்து விடுவார்கள்.

நாங்கள் எல்லாம் நகரத்தில் வாழ்கிறோம்.. எங்களுக்கு எங்கே நேரம் இருக்கு.யார் தண்ணீர் ஊற்றுவது என்று வயதான பிறகு ஊருக்கு வெளியே சின்னதாக இடம் வாங்கி என்று கற்பனை கட்டி அது நனவாகும் முன் வெளி நாட்டில் போய் செட்டில் ஆகிவிடுவார்கள்.

மொத்தத்தில் மரம் வைக்க வேண்டும் என்ற ஆசை மண்ணோடு புதைந்து விடும். மண்ணுக்குள் போட்ட விதை விருட்சமாவது போல, ஒரு சிலர் தான் விரும்பிய மரங்கள் மலர் செடிகள் என பட்டியலிட்டு, என்று இருப்பார்கள்..

உங்களுக்கு தான் இந்த செய்தி.. நீங்கள் விரும்பும் மரத்தை வைக்க போறீங்களா. அல்லது மண்ணுக்கு ஏற்ற மரத்தை வைக்க போறீங்களா என்று முடிவு செய்யுங்கள்.

மண் வகைகள் மொத்தம் ஒன்பது அவை, செம்மண், மணற்பாங்கான மண், மணற்குறு மண், குறு மண், களி மண், கரிசல்மண், செம்புறை மண், வண்டல் மண் அல்லது அடை மண் மற்றும் பாலை மண். ஒவ்வொன்றுக்கும் ஒரு கிரக காரத்தை வைத்து பார்த்தால் விவசாயத்தில் சோதிட சிந்தனைகளை பொருத்தி பார்த்து அதில் தடம் பதிக்கலாம். இப்போதெல்லாம் community farming என்ற முறை வந்து விட்டது. அதில் காய்கறி, கீரைவகைகள், பழ மரங்கள், வணிக மரங்கள், பூ

வகைகள் மூலிகை செடிகள் என தேவைக்கு ஏற்ப இட வசதிக்கு ஏற்ப மாடியில் கூட அமைத்துக் கொள்ளலாம். ஒரு தொட்டி, கொஞ்சம் மண், கொஞ்சம் தண்ணீர் போதும்.

சென்னை பீச் பக்கம் போனால்
ஸ்ப்ரிங் பொட்டடோ
தான் குழந்தைகள் கூட
விரும்பி சாப்பிடுவார்கள்

சோதிடம் ஒரு கடல் எனபது போல விவசாயமும் ஒரு கடல். முன்பெல்லாம் குடும்பத்தில் மாமா ஊஞ்சலில் உட்கார்ந்து இருப்பார். மாமி அருகில் வந்து “ஏன்னா இன்னிக்கு என்ன சமைக்கட்டும்” என்று ஆலோசனை கேட்பார், மாமாவும் அன்றைய திதி நட்சத்திரம் பார்த்து இந்த காய் சமைத்து விடு என்று சொல்லுவார். சமையலும் சுவையாக இருக்கும் சாப்பாடும் ஆரோக்கியமாக இருக்கும். எந்த வைரஸ் பற்றிய செய்திகளும் அவர்களுக்கு தெரிந்து இருக்க வாய்ப்பு இல்லை.

ஆனால் இன்றைய நாளில்... மார்கெட்டில் எந்த காய் விலை குறைவாக கிடைக்கிறதோ அது மருந்து அடித்த காய்களாக இருந்தாலும், அதை விரும்பியோ விரும்பாமலோ சமைத்து பசிக்கு எதையோ சாப்பிடுவது பழக்க மாகி போச்சு.

இதில் நாமே காய்களை பயிரிட்டு, (அது மாடி அல்லது பால்கனி தோட்டமாகவும் இருக்கலாம்) நஞ்சு இல்லா காய்களை பறித்து சாப்பிட்டு என்றால் கேட்பதற்கு நன்றாக தான் உள்ளது மனம் இருந்தால் கூடவே கொஞ்சம் உழைப்பும் இருந்தால் இது சாத்தியமானதே.

இந்த வாரம் உருளைக்கிழங்கு வைத்து ஒரு செய்தி சொல்ல போறேன்.

ஜாதகத்தில் சுக்கிரன் சுபத்துவம் பெற்று இருந்தால் அவர்கள் உருளைக்கிழங்கு பிரியர்களாக இருப்பார்கள் என்று கண்ணை மூடிக் கொண்டு சொல்லி விடலாம். மார்கெட்டில் கூட பாருங்கள் சுக்கிரன் மற்றும் சந்திரன் சம்பந்தப்பட்ட காய்கள் அதிகமாக விற்பனையாகும் உதாரணம் உருளைக்கிழங்கு, தக்காளி போன்றவை.

வட மாநிலத்தவர்களுக்கு உருளைக்கிழங்கு இல்லை என்றால் சாப்பாடே இல்லை. நாலு ரொட்டி கொஞ்சம் உருளைக்கிழங்கு சாகு போதும்.

சோதிட சாஸ்திரத்தில் அசுர குருவாக இருக்கும் சுக்கிரன், உயிர் காரகங்களை தூண்டி வாழ்க்கையில் பிடிப்பை ஏற்படுத்துவது போல உருளைக்கிழங்குக்கு சில அடிப்படையில் குணங்கள் உண்டு.

இது நுண்ணியிர் பெருக்கத்திற்கு இயற்கை விவசாயத்தில் பயன்படும். என்றால் ஆச்சரியமாக உள்ளதா? ஜடம் என்ற கொரியன் முறையில் நுண்ணியிர் பெருக்கத்திற்கு இதை தான் செய்கிறார்கள். இது மண் வளத்தை காத்து விளைச்சலையும் அமோகமாக தந்து விடும். சுக்கிரன் என்றால் அப்படி தானே. அடுக்கு மாடி வீடுகள் பல சக்கர வாகனங்கள் என்று சொல்லி தானா சுக்கிரனின் பெருமைகள் தெரிய வேண்டும்.

பல் முளைக்காத சின்ன குழந்தைகளுக்கு உருளைக்கிழங்கை, அப்படியே வேக வைத்து கொடுப்பார்கள். குழந்தைகளுக்கு பல் வேகமாக வந்து விடும்.. பெட்ரோலுக்கு மாற்றாக எத்தனால் கூட எடுப்பதாக சொல்கிறார்கள்.

எங்கே எல்லாம் சுக்கிரன் காரகத்துவம் இருக்கிறதோ, அங்கே எல்லாம், அழகும், ஆனந்தமும் விளையாடும்.

இந்த உருளைக்கிழங்கு முக அழகுக்கும் பயன்படுத்துவார்கள். கருப்பு வளையம் முழங்கையில் உள்ள கருப்பு என இவற்றிக்கு உருளைக்கிழங்கை தேய்த்தால் எந்த வேதியியல் க்ரீமும் இல்லாமல் கருப்பு நிறம் காணாமல் போயிடும். தோலில் இயல்பான தன்மை வந்து விடும். குளிப்பதற்கு முன் முகத்தில் பூசுவதால், முகம் ப்ளீச் செய்தது போல பளபள என்று ஆகி விடும்.

இப்படி சுக்கிரன் காரத்துவம் கொண்ட உருளைக்கிழங்குகை ஏதாவது ஒரு வடிவத்தில், வாரத்திற்கு இரண்டு முறையாவது எடுத்துக் கொள்ளாத குடும்பங்கள் குறைவு என்றே சொல்லி விடலாம்.

ஆப்பிள் கன்னம், உப்பிய கன்னம் இது எல்லாம் சோதிட குறிப்பில் சுக்கிரனை வைத்து சொல்லி விடலாம். அதற்கு சுக்கிரன் காரகத்துவம் கொண்ட உருளைக்கிழங்கு தான் துணை செய்யும் என்றால், வியப்பாக உள்ளது அல்லவா?

அன்றாட வாழ்வில் சோதிட முறைகளை பொருத்தி பார்த்தால், சோதிடம் என்ற கடலில் நீச்சல் பழகுவது எளிதாக மட்டுமல்ல, சுவையாகவும் இருக்கும்.

கால அளவு, இடத்தின் தன்மை, காய்கள் பயிரிடும் சூழல், பயிர் சுழற்சி முறை என்று சோதிட கணிப்பை கொண்டு அணுகினால், விவசாய விளைச்சலை விரல் விட்டு சொல்லிடலாம் என்றால் வியப்பாக தான் உள்ளது.

இப்போ கூட பாருங்கள். சென்னை பீச் பக்கம் போனால் ஸ்ப்ரிங் பொட்டடோ தான் குழந்தைகள் கூட விரும்பி சாப்பிடுவார்கள் என்றால் இதற்கு மேல என்ன சொல்லனும்னு நினைக்கறீங்க..

அடுத்த வாரம் இன்னொரு சிந்தனையுடன் இணைகிறேன். நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்.!

# - 12 -

பல சமயங்களில் பார்த்து இருக்கலாம். சிலர் ஆஞ்சநேய சுவாமிக்கு வடை மாலை சாற்றுவார்கள்.. வட இந்தியாவில் அனுமான் ஜிக்கு ஜாங்கிரி மாலை போட்டு வழிபாடு செய்வார்கள்.

அனுமான் சாலிசா ஒன்று போதும் என்று இன்றும் நம்பிக் கொண்டு இருப்பவர்கள் வட நாட்டில் அதிகம் இருக்கிறார்கள். வெற்றியும் பெற்றுக் கொண்டு இருக்கிறார்கள்.

தமிழகத்தில் சிலர் அம்மன் கோவில் வாசலில் பொங்கல் வைப்பார்கள் என்பதை நாமும் பார்த்து இருக்கலாம்.

237 கோடி வாசகர்கள் பார்வை பெற்ற ஒரு வீடியோ அனுமான் சாலிசா

அது சரி

இப்படி உணவு பண்டங்களை கொண்டு சுவாமிக்கு மாலை போடுவது சரியான செயல்முறையா தெரியவில்லை, என்று சிலர் கேட்கிறார்கள். இன்னும் சிலருக்கு இது போல யோசனையாக கூட இருக்கலாம்.

கடவுள் நம்பிக்கை இல்லதவர்கள் கூட இதை வேறு விதமாக சொல்லுவார்கள். அவர்களுக்கும் சேர்த்து இந்த பதிவு இருக்கட்டுமே என்று தொடர்கிறேன்.

நேரம் கிடைக்கும் போது, யூடியூப் பார்க்கும் பழக்கம் உள்ளவர்களா நீங்கள்? ஆம்.!. என்றால் துளசிதாசர் அருளிய அனுமான் சாலிசா வீடியோவை கேட்டு பாருங்கள். உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? 237 கோடி வாசகர்கள் பார்வை பெற்ற ஒரு யூடியூப் வீடியோ அனுமான் சாலிசாவாக தான் இருக்கும், என்றால் வியப்பாக உள்ளதா?

சரி.. இப்போ எதுக்கு வடைமாலையும், ஜிலேபி மாலையும் என்று யோசிக்கிறீர்கள் புரிகிறது.

இப்போ தான் சர்ப்ப கிரகங்களான ராகு கேது பெயர்ச்சி நடந்தது. தொடர்ந்து குரு பெயர்ச்சி இப்படி கிரகங்கள் பெயர்ச்சி வரிசையில் சனி பெயர்ச்சியும் அதாங்க அதிசார பெயர்ச்சியாக சனி மகர ராசியில் இருந்து கும்ப ராசிக்கு பெயர்ச்சியாகி இருக்கிறார்.

இந்த சனியின் அதிசார பெயர்ச்சி ஜூலை மாதம் வரையில் என்ற குறுகிற காலம் தான் இருக்கும். அதன் பிறகு சனி பகவான் மீண்டும் மகரத்திற்கு வந்து விடுவார். என்றாலும், ஏற்கனவே ஏழரை சனியை அனுபவித்துக் கொண்டு இருக்கும் தனுசு, மகரம், கும்ப ராசி அன்பர்களுக்கு ஏதாவது சொல்ல வேண்டாமா என்று தோன்றியது அதற்கு தான் இந்த பதிவு.

கடந்த வாரங்களில் சொன்ன உணவுக்கும் சோதிடத்திற்கும் உள்ள தொடர்பை போல தான் இந்த வடைமாலையும், ஜிலேபியும், பொங்கலும் சொல்கிறது என்றால் புருவத்தை உயர்த்தி பார்க்கும்படி தான் இருக்கும்.

அதனால் தான் இந்துக்கள் வழிபாட்டில், ஒரு சில வழிபாட்டிற்கு ஒரு சில நிவேதனங்கள் என்று வரைமுறை செய்து வைத்து இருக்கிறார்கள். இதை உளவியல் ரீதியாக அறிவியல் ரீதியாக என எப்படி வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளலாம். அது மட்டுமா மூடநம்பிக்கை என்பது போலவும் சொல்லிக் கொள்ளலாம். ஆனால் பயன் கிடைக்கும் என்றால் வேண்டாம் என்றா சொல்லுவீர்கள்.

நாம் தயார் செய்யும் ஒவ்வொரு உணவு பதார்த்தங்களையும் ஒரு கிரகம் காரகம் கொண்டு இருக்கும். இதில் சனி பிரீதியாக சொல்லும் ஜிலேபி, சர்க்கரை பொங்கல், மிளகு வடை எல்லாமே சனி தோஷ நிவர்த்திக்கு வழிபாடு செய்யும் ஆஞ்சநேயருக்கு மாலை சாற்றி வழிபாடு செய்தால் தோஷ நிவர்த்தி ஏற்படும்.

இதில் குறிப்பாக உளுந்துக்கு காரகம் வகிக்கும் ராகு பண்டங்களை பாம்பு போல் மாலையாக்கி அதை சேர்த்து செய்வதில் தான் குறிப்பே இருக்கிறது.

அம்மன் கோவிலில் வாசலில் வைக்கும் பொங்கலில் கூட பானையின் கழுத்தில் மஞ்சள் கிழங்கு கொண்டு மாலை கட்டுவார்கள் என்பதை கவனித்து இருந்தால் உங்களுக்கு சொல்லாமலே புரியும்.

இந்துக்கள் அல்லாதவர்கள் அல்லது கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் இதை செய்ய மாட்டார்களே, அவர்களுக்கு கழுவாயே கிடையாதா? என்று அவர்கள் மீது அன்பு உள்ளவர்கள் கேட்க நினைக்கலாம்.

அவர்களும் இந்த உணவு பண்டங்களை இப்படி தயார் செய்து சாப்பிடலாம். மற்றவர்களுக்கும் தரலாம். அந்த பலன்கள் அவர்களுக்கும் நிச்சயம் கிடைக்கும். உணவில் மத பேதம் இல்லை தானே. உணவில் மட்டுமல்ல, அன்பு உணர்விலும் மத வேறுபாடு கிடையாது..

இப்படி எல்லாம் செய்தால் கெடுபலன்கள் தான் குறையுமா? இது என்ன மூட நம்பிக்கை போல உள்ளதே என்று யாரும் யோசிக்க வேண்டாம்.

உளவியல் ரீதியாக ஒரு உத்தியை சொல்கிறேன் பாருங்கள். ஒரு பிரச்சனை நம்மை எதிர் நோக்கி வருகிறது என்றால், அதை எதிர் கொள்ள என்ன செய்ய வேண்டும்? கவனத்தை இன்னொரு பக்கம், திசை திருப்பி விட்டால், அந்த பிரச்சனையில் இருந்து நாம் தப்பித்துக் கொள்ள முடியும் தானே. அன்பர்கள் இதை சொல்லாமலே இது பற்றி புரிந்து கொள்வார்கள்.

இந்த பிரச்சனைக்கு தீர்வே கிடையாது என்றால் இறைவன் கருணை இல்லாதவன் என்பது போல ஆகி விடும். அதனால் நம்பிக்கையோடு இருங்கள்.

“அளவற்ற கருணையும் நிகரற்ற அன்பும் நிறைந்த ஆண்டவன்”, ஒவ்வொரு பூட்டிய பூட்டுக்கும் சாவியையும் சேர்த்தே தான் கொடுத்து இருக்கிறான். சாவிக் கொத்தில் இருந்து எந்த சாவியை எடுக்கிறோம். எப்போது எடுக்கிறோம் என்பதை வைத்து தான் பூட்டிய கதவுகள் திறக்கப்படுகின்றன.

“கேளுங்கள் அப்போது கண்டு அடைவீர்கள்; தட்டுங்கள் திறக்கப்படும்” என்று சொல்லும் வாசகமும் இந்த கருத்தின் அடிப்படையில் தான்.

சரிங்க ஐயா இது போல கடன் தொல்லை, பண வரவு இவைகளுக்கும் இது போல உணவு பண்டங்களை வைத்து ஏதாவது சொல்ல முடியுமா? என்று கேட்க வரும் உங்கள் உணர்வுகள் புரிகிறது. அதை சொல்ல தனியாக ஒரு பதிவே போடலாம் என்றாலும், ஒரு சில குறிப்புகளை தருகிறேன்.

ஜாதக கட்டத்தில் சனி, வீட்டு வாயில் கேட்டில் கடன் என்று இருப்பவர்கள் உலர்ந்த திராட்சை பழத்தை காகத்திற்கு வையுங்கள். காகம் விரும்பி சாப்பிடும் உங்கள் கடன் குறையும். அது விலை அதிகமாச்சே என்றெல்லாம் யோசிக்க கூடாது.

உடம்பு சரியில்லை என்றால் எவ்வளவு விலை அதிகமானாலும் மாத்திரைகளை வாங்கி விழுங்குவதில்லையா என்று பாசிடிவ் சிந்தனைகளுடன் உங்கள் செயல்களை அமைத்துக் கொள்ளுங்கள்.

இதே பல ஏல மாலை, மனமூட்டிகள் என நம்முடைய எண்ணமும் செயல்களும் உணவில் மட்டுமல்ல உறவிலும் இருந்தால் சிக்கலை எதிர் கொள்ளவும் இறைவழிபாட்டினால் இன்னல்களை களையவும் முடியும் என நம்பிக்கை கொள்ளுங்கள்.

நம்பிக்கை உள்ளவர்கள் அனுமான் சாலிசா படியுங்கள். முடியாதவர்கள் கேளுங்கள், கடவுள் நம்பிக்கை இல்லாதவராக இருந்தாலும், மற்ற மதத்தினராக இருந்தாலும், இது ஒரு இசை போல என கேளுங்கள்.

அடுத்த வாரம் இன்னொரு சிந்தனையுடன் இணைகிறேன். நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்.!

# - 13 -

கடலால் சூழ்ந்த இந்த உலகம் பெரியது; அதை விட சிறியது இந்த ஆசிய கண்டம்; அதை விட சிறியது நாம் வாழும் இந்தியா; அதை விட சிறியது நாம் வசிக்கும் மாநிலம்; அதை விட சிறியது நாம் இருக்கும் நகரம்; அதை விட சிறியது நாம் வாழும் ஊர்; அதை விட சிறியது நமது தெரு; அதை விட சிறியது நம்முடைய வீடு; அதை விட சிறியது நம்முடைய பிளாட்; அதை விட சிறியது நம்முடைய அறை.

இப்போ பாருங்கள், எத்தனை பெரிய உலகத்தில் நாம் இத்தனை சிறியவராக நாம் இருக்கிறோம் என்று.. இந்த எண்ணம் வந்து விட்டால், "எனக்கு தான் எல்லாம் தெரியும்" என்ற எண்ணம் வருமா? "நான் பெரியவன்" என்ற ஆணவம் தான் துளிர் விடுமா? 'அகங்காரமும்', 'மமகாரமும்' அடங்கினால் ஆண்டவன் அருள் அருகிலே கிட்டிவிடுமே. அது சரி அதுக்கு தான் பயிற்சியும் முயற்சியும்.

குளியல் அறையில் பாத் டப் (bath tub) பில் குளிப்பதற்கு பெரிய பயிற்சி தேவை இல்லை; நீச்சல் குளத்தில் நீந்த கொஞ்சம் பயிற்சி செய்து விட்டால் எத்தனை lap அடிக்க என்று இலக்கை வைத்து விடலாம், ஏரியில் நீச்சல் செய்ய கொஞ்சம் தயக்கம் இருக்க தானே செய்யும், ஆற்றில், என்றால் கேட்கவே வேண்டாம்; அதை விட கடலில் என்றால்.....

குழந்தையாக இருக்கும் போது பாத்ரூமில் குளிப்பதற்கே அழுவது வழக்கம். இல்லையா... அப்படி தான் சோதிட பயிற்சிக்கு படிக்கும் போது ஆரம்ப நிலையில் கொஞ்சம் சிரமமாக தான் இருக்கும். இதை தாண்டி பயிற்சியும், முயற்சியும் அமைந்து விட்டால், சோதிட களையும், கைவசப்படும். அதுவும் ஒன்றை ஒன்று தாண்டி ஒன்றை கடந்து நின்றால், அங்கேயும் நமக்கு தெரியாத தகவல்கள் சில இருக்கும். அதனால் தான் பத்து வயதிற்குள் சோதிட பயிற்சி தொடங்க வேண்டும்.

நம்மில் பலர் வயதான பிறகு ரிடையர்டு ஆன பிறகு தான் சோதிடம் கற்றுக் கொள்ள தொடங்குகிறார்கள். அவரவர்கள் வாழ்க்கை முறை அது என்றாலும், நாம்

சோதிட பயிற்சி என்ற விதையை விதைக்கும் காலம் பத்து வயதாக தான் இருக்க வேண்டும்.

சில சோதிட சிந்தனைகளை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். சரியாக உள்ளதா சொல்லுங்கள்..

நட்புக்கு காரகமாக சொல்லும் புதனே நவக்கிரகங்களில் வலிமையான கிரகம். அதனை விட பலம் பொருந்தியது செவ்வாய், செவ்வாயை விட சனியும், சனியை விட குருவும் பலம் பெற்றவர்கள்., குருவை விட சுக்கிரனும், சுக்கிரனை விட சந்திரனும் சந்திரனை விட சூரியனும் சூரியனை விட ராகுவும் ராகுவை விட கேதுவும்,பலம் பெற்றவர்கள்.

சர்ப்ப கிரகங்களுக்கு ராசி மண்டலத்தில் சொந்த ஆட்சி வீடு கிடையாது நிழலுக்கு உருவம் கிடையாது. ஆனால் எந்த உருவத்தை வைத்தாலும் அதற்கு நிழல் உண்டு என்பது போல சிந்திக்க பழகிவிட்டால், சர்ப்ப கிரகத்தின் நிலையை புரிந்து கொள்ள முடியும்.
சர்ப்ப கிரகங்கள் யாருடைய வீட்டில், மற்றும் யாருடைய நட்சத்திர சாரத்தில் இருக்கிறார்களோ அதை ஒட்டி பலன் தருவார்கள்.

திரிகோணம் அல்லது முதல் கோணம் என்று சொல்லும் 1-5-9 ம் இடங்கள் இவற்றின் அதிபதிகள் திசை இளம் வயதில் வருவது பொதுவாக நல்லது.. எல்லோருக்கும் இப்படி அமைந்து விடுமா என்பது தான் மில்லியன் டாலர் கேள்வி. கோனாதிபதிகள் எப்போதும் நன்மைகளையே செய்வார்கள்.

இதே போல, கேந்திர அதிபதி, நட்சத்திற்கு அதிபதி , ராசிக்கு அதிபதி, லக்கினத்திற்கு அதிபதி, பாதகாதிபதி, மாரகாதிபதி என்று அந்தெந்த துறைக்கு உரிய தலைவர்களை அடையாளம் கண்டு கொள்ள

வேண்டும். அரசு நிர்வாகத்தில் அந்த துறை நிர்வாகத்தின் அமைச்சர் போல, என்று புரிதலுக்காக வைத்துக் கொள்ளுங்கள்.

எந்த ஜாதகத்திற்கும் கொடுப்பினை என்பது மாறாது; அது திசை புத்தி காலங்களில் தான் கிடைக்க வேண்டிய பலன்கள் கிடைக்கும். அதனால் தான் யோகமான ஜாதகர் கூட சிரம பட வேண்டிய சூழலில் இருப்பார்கள் என்பதை அனுபவத்தில் பார்த்து இருக்கலாம்.

பொதுவாகவே லக்னாதிபதியும், ராசியதிபதியும் நண்பர்களாக அமைந்த ஜாதகர் மகிழ்ச்சியுடன் இன்பமாக வாழ்வார். லக்னாதிபதி முதல் பாதி வாழ்க்கையின் முதல் இன்னிங்க்ஸ் என்றும், ராசியதிபதி இரண்டாம் பாதி வாழ்க்கையின் இரண்டாம் இன்னிங்க்ஸ் என்றும் புரிதலுக்காக வைத்துக் கொள்ளுங்கள்.

இப்போ பாருங்கள், ஒரு ஜாதகத்தில், லக்னாதிபதி பலமாகவும் ராசியதிபதி பலமில்லாமலும் அமைந்து விட்டால், ஓகோ என தொடங்கிய வாழ்க்கை அச்சோ என்று பின்பகுதியில் வந்து நிற்கும். வாழ்ந்து கெட்டவர்கள் என்று கிராமத்து பக்கத்தில் சொல்லுவார்கள்.

இதுவே ராசியதிபதி பலம் பொருந்தியும், லக்னாதிபதி பலம் இழந்தும் அமைந்து விட்டால், முதல் பாதியில் எதுவும் கிடைக்காது, அது கல்வியோ அல்லது பொருளாதார மேம்பாடோ இப்படி எதுவும் கிடைக்காது. தோல்வி மேல் தோல்வி தொட்டதெல்லாம் நஷ்டம் என இருக்கும்.

ஆனால் பின் பகுதியில் பணம் புகழ் வந்து கொட்டும் தர்ம சிந்தனை மேலோங்கும் வள்ளல் பட்டம் கூட வந்துவிடும். “அப்படி இருந்த அவரா ..இவர்” என்று சொல்லும்படி இருக்கும்.

சரிங்க ஜி, லக்னாதிபதியும் பலமாக அமைந்து, ராசியாதிபதியும் பலமாக அமைந்து விட்டால், என்று கேட்க நினைக்கறீர்கள் புரிகிறது.

அவர்களுக்கு பிறப்பு முதல் இறப்பு வரை கஷ்டம் இல்லாத நிலைமை என்று அமைந்து விடும்.

லக்னாதிபதி நீசமாகி, ராசியதிபதியும் நீசமாகிவிட்டால், வேண்டாமுங்க இப்படி யோசித்து பார்க்கவே கஷ்டமாக தான் இருக்கு. இவர்களுக்கு கடவுள் நினைத்தால் மட்டுமே வாழ்க்கை என்று ஒன்று இருக்கும்.

இந்த கிரகம் இப்படி அமைய வேண்டும் என்பது இறைவன் கொடுத்த வரும். கிரகங்களுக்கு ஆண்டவன் போடும் சட்டம். இதை திருவருள் ஒன்றினால் மட்டுமே நேர் செய்ய முடியும். பல முறை சொன்னது போல நவ கிரகங்கள் ஆண்டவனின் ஆணையை ஏற்று நடத்தும் executive officers அவ்வளவு தான். அவர்களை வைத்து நமக்கு என்ன பலன் தர போகிறார்கள் என்று தெரிந்து கொள்ளலாமே தவிர அவர்களால் பலனை மாற்றி தர முடியாது. முடியவே முடியாது.

இறைவன் அருள் பெற்றால் எதுவும் சாத்தியமாகும். அதற்க்கான பயிற்சியும் முயற்சியும் தான் தேவை. மீண்டும் அடுத்த வாரம் சந்திப்போம். நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்.!

# - 14 -

திருஷ்டி பொம்மை பொதுவாக சிலர் வீட்டில் அல்லது கடையில், மாட்டி வைத்து இருப்பார்கள்... உன் கடைக்கண் பார்வை ஒன்று போதுமே என்று காதலர்களும் காதலியின் பார்வைக்கு ஏங்கி கொண்டு இருப்பார்கள்.. பண்டைய நாட்களில் தென்மாவட்டங்களில், ஞாயிற்றுக்கிழமையானால் போதும், திருஷ்டி சுத்தி போடுவார்கள்..



உப்பு மிளகாய் சுற்றி போடுவார்கள். இதன் கிரக காரகத்துவத்தை வைத்து இன்னொரு நாள் சிந்திப்போம். இப்போ இந்த பார்வைகளை வைத்து சில சிந்தனைகளை எடுத்துக் கொள்வோம்.

இப்படி இந்த பார்வைக்கு அத்தனை பலன் இருக்குதா என்று யோசித்து பார்த்தால், நமக்கே வியப்பாக இருக்கும்.. சாதாரண இந்த பார்வையிலே இப்படி என்றால் கிரகங்கள் பார்த்தால் என்று சிந்திக்க தோன்றும்போது தான் பார்வை பற்றிய நமது சிந்தனையும் எண்ணமும் நம் முன்னே வந்து நிற்கிறது.

சிலர் பொறாமை எண்ணம் கொண்டு பார்ப்பார்கள். அதை அக்னி பார்வை என்று சொல்லுவார்கள். அவர்கள் பார்வையே நம்மை சுட்டு எரித்து விடும். அன்பு பார்வையால் அகிலமே வசப்படும்.

வாழ்க்கை எனும் பாதையிலே பொறாமை என்பது நெருப்பு அது ஒரு துளி நம் மனதில் பட்டாலும், பட்ட மரம் சுட்டு எரிவது போல, வாழ்வின் நல்ல பலன்கள் யாவும் எரிந்து அழிந்து விடும். அதனால் நமது வாழ்க்கையில், நாம் பொறாமை இல்லாமல் இருக்க பழக வேண்டும், என்ற குறிப்பை அடிக்கோடிட்டு மனதில் ஆழமாக பதிய வைத்துக் கொள்ள வேண்டும்.

பொறாமை என்பது அடுத்தவர்களின் ஆக்கத்தை கொண்டு பொறுக்க முடியாத தன்மை தான். அவருக்கு கிடைத்தது நமக்கு

கிடைக்கவில்லையே என்ற ஏக்கம் தான் பொறமை பாதைக்கு வழி காட்டும்.

இயல்பாகவே பாருங்கள், ஒருவருக்கு ஒருவர் நேருக்கு நேராக சந்திக்கும் போது தான் நாம் இன்னொருவரை அல்லது இன்னொருவர் நம்மை பார்ப்பார்கள். இல்லையா.. தவறு செய்தவர்களை விசாரிக்கும் போது, 'என் கண்ணை பார்த்து சொல்லு" என்று விசாரணையை தொடங்குவார்கள்.

பொறாமை என்பது அடுத்தவர்களின் ஆக்கத்தை கொண்டு பொறுக்க முடியாத தன்மை தான்.

அவருக்கு கிடைத்தது நமக்கு கிடைக்கவில்லையே என்ற ஏக்கம் தான் பொறமை பாதைக்கு வழி காட்டும்.

இப்படி தான் நேருக்கு நேராக அதாவது ஜாதக கட்டத்தில் ஒரு கிரகம் எந்த இடத்தில் இருக்கிறதோ அதற்கு நேர் எதிரான ஏழாம் பார்வை எல்லா கிரகத்திற்கும் உண்டு. நிழல் கிரகமான ராகு கேதுவுக்கு பார்வை இல்லை நிழலுக்கு ஏதுங்க பார்வை (வெளிச்சம்) என்பதை சொல்லாமலே புரியும்.

எல்லா கிரகத்திற்கும் ஏழாம் பார்வை என்றால் சிறப்பு பார்வையை சொல்லி தானே ஆக வேண்டும். ஆம். குரு, சனி, செவ்வாய் இந்த மூன்று கிரகங்களுக்கும் சிறப்பு பார்வை உண்டு.. அது ஒரு பார்வை இல்லை இரண்டு பார்வை..

சனி செவ்வாய் என்ற இரண்டு பாப கிரகத்திற்கு தரப்பட்டுள்ள சிறப்பு பார்வை, குரு என்ற ஒரே ஒரு சுப கிரகத்திற்கு தரப்பட்டுள்ளது. என்பதை சிந்தித்து பார்த்தால், ஒரு குரு பார்வை போதும், என்று மேலோங்கி சொல்ல வந்ததாகவே புரியும்.

இதில், சனி கிரகம் 3ம் இடத்தையும், 10ம் இடத்தையும் பார்க்க கூடிய சிறப்பு அம்சம் உண்டு.

இதே போல குருவுக்கு 5 ம் இடமும் 9 ம் இடமும், செவ்வாய்க்கு 4 மற்றும் 8 ம் இடம் என்று சோதிட சாத்திரத்தில் உள்ளது.

ஏனுங்க இந்த இடத்தை சொல்லி இருக்காங்க.. இதை எப்படி நினைவில் வைத்துக் கொள்வது என்று உங்களுக்கு தோணலாம்.. உங்களுக்காக சில சிந்தனைகளை சொல்றேன், சரியாக உள்ளதா

திரிகோணம் என்று சொல்லக்கூடிய 5 மற்றும் 9 ம் இடங்களை தான் குரு பார்ப்பார். அதனால் தான் திரிகோணம் சிறப்பு பெற்றதா என்று நீங்களே யூகித்து கொள்ளுங்கள்.

இதில் சனியோட பார்வை பொல்லாதது அது எந்த நிலையிலும் கெடுக்கும் என்று சொல்லுவார்கள். அதே போல செவ்வாயும்,

இதில் பாருங்கள் நண்பர்கள் பார்த்துக் கொண்டால், அங்கே அன்பு மலரும், ஆனந்தம் பெருகும். அதுவே பகைவர்கள் பார்த்துக் கொண்டால், என்ன நடக்கும் என்று உங்கள் கற்பனைக்கே விட்டு விடுகிறேன். இங்கேயும் அப்படி தான் நட்பு கிரகங்கள் பார்த்துக் கொண்டால் நன்மையையும், பகை கிரகங்கள் பார்த்துக் கொண்டால் அதற்கு மாறாகவும் பலன்கள் கிடைக்கும்.

Good mind Good find என்று ஆங்கிலத்தில் ஒரு பழ மொழி சொல்லுவார்கள் அது போல ஒரு கிரகத்தின் இயல்பு தன்மை என்னவாக இருக்கிறதோ அதை ஒட்டி தானே அதன் பார்வை அமையும்.

அப்போ இந்த பார்வையை எப்படி பார்க்கிறது என்ற எண்ணமும் சந்தேகமும் வருவது இயல்பு தானே..

நாம் ஒருவரை பார்க்கும் போது, அவரும் நம்மை பார்த்தால் தான் அங்கே பரஸ்பரம் வரும். இதை தான் சம சப்தமம் என்று சொல்லுவார்கள் சப்தமம் என்பது ஏழாம் இடம். ஒருவருக்கு ஒருவர் ஏழாம் இடத்தில் இருந்தால், அதை சம சப்தமம் என்று புரிந்து கொள்ளலாம்.

ஆக பரஸ்பர பார்வை நன்மை செய்யுமா அல்லது தீமை செய்யுமா என்பது அந்த கிரகங்களின் வலிமையை பொறுத்து என்று பொதுவாக சொல்லலாம்.

**சுப கிரகமான குருவை, சனி சமசப்தமாக பார்க்கும்போது குரு தன் இயற்கை தன்மையை இழக்கிறது என்பதை புரிந்து கொண்டால், இந்த சம சப்தம பார்வை புரியும்.**

பிறப்பு ஜாதகத்தில் உள்ள பார்வையை பார்ப்பது போல கோச்சாரத்தில் உள்ள கிரக பார்வையையும் வைத்து பலன் சொல்ல பழக வேண்டும்.

சனியின் பார்வை மட்டும் அல்ல, எல்லா கிரங்களின் பார்வையும், பார்க்கும் பாவகத்தையும், பாவகத்தில் உள்ள கிரகங்களையும் பாதிக்கும், அந்த பார்வை நன்மை செய்யுமா? இல்லையா என்பது அந்த கிரகத்தின் சுப மற்றும் அசுப தன்மையை ஒட்டி அமையும்.

சனி கிரகத்திற்கும் காம எண்ணங்களுக்கும் தொடர்பு எதுவும் இருக்கிறதா என்றால், பொதுவாக இல்லை என்று தான் சொல்லுவார்கள். ஆனால் பாருங்க, சனியின் பார்வை நான்காம் இடத்தில் விழுந்து விட்டால், அவர்களுக்கு காம எண்ணம் எப்போதும் சுற்றிக் கொண்டே வரும். கூடவே சந்திரனும் சாதகமாக அமைந்து விட்டால் அது போன்ற கதை எழுதுவது, அதை கற்பனையாக வைத்து அது போன்ற திரைப்படம் எடுப்பது என்று போகும்.

கண்கள் பேசும், பார்வை சொல்லும் ஒவ்வொரு செயலும் புரிந்து கொண்டால், கிரக பார்வையை புரிந்து கொள்ளலாம். கிரங்களுக்கு கண்கள் இருக்கிறதா அவை எப்படி பார்க்கும் என்பது போல சிந்திக்க கூடாது. பார்வையின் இயல்புகளை, அதன் தன்மைகளை கிரகங்கள் வெளிப்படுத்தும் நிலையை தான் கிரக பார்வை என்று சொல்லப்படுகிறது என்பதாக புரிந்து கொள்ள வேண்டும்.

உதாரணமாக சில சொல்கிறேன், சரியாக உள்ளதா சொல்லுங்கள். சனி, லக்கனத்தை பார்த்தால் ஜாதகரின் குணநலன்களில் அடாவடித்தம் கொஞ்சம் அதிகமாகவே இருக்கும்.

இரண்டாமிடத்தினை பார்த்தால் அவரின் திருமணவாழ்வு கால தாமதபடும் மூன்றாமிடத்தை பார்த்தால், நெஞ்சில் துணிச்சல் அதிகமாக இருக்கும்..

இது பாவக காரத்தை வைத்து சொல்வது போல, கிரக காரகத்தை வைத்து சொல்ல வேண்டும். பகை- நட்பு உறவை வைத்து சொல்ல வேண்டும். அப்புறம் எந்த சிறப்பு பார்வை என்பதை வைத்து சொல்ல வேண்டும். இப்படி சொல்ல பழகி விட்டால்,பலன்கள் சொல்வது கைவசமாகி விடும். சரி, கோச்சார பார்வையில் உங்கள் ராசியை எந்த கிரகம் பார்க்கிறது என்று பாருங்கள்,

நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்.!

# - 15 -

முப்பது ஆண்டுகள்...

ஆம். முப்பது ஆண்டுகள் வாழ்ந்தவரும் இல்லை.. முப்பது ஆண்டுகள் வீழ்ந்தவரும் இல்லை என்று சொல்லுவார்கள். சோதிட சாத்திரத்தில் பெரிய கிரகம் குருவும் சனியும் தான், இதில், சூரியனை சனிபகவான் சுற்றி வரும் காலம் முப்பது ஆண்டுகள். கர்ம காரகனான சனிபகவானின் ஒரு சுற்றை வைத்து இந்த சோதிட பழமொழி வந்து இருக்கலாம், என்பது பலரின் கருத்து.

*அவனிதனிலே பிறந்து மதலை எனவே தவழ்ந்து*
*என்பது அழகுபெறவே நடந்து - இளைஞோனாய்*

*அருமழலையே மிகுந்து குதலை மொழியே புகன்று*
*அதிவிதமதாய் வளர்ந்து - பதினாறாய்*

பிறந்து, தவழ்ந்து, வளர்ந்து என்பதை சொல்லும், அருணகிரிநாதர் அருளிய பழனி திருப்புகழ்.

*"...........முப்பதில் ஈர்ந்து ஒழிந்தாரே".*

என்று திருமந்திரமும் முப்பது வரை தான் இளமை என்று சொல்கிறது., ஔவைப் பாட்டியும்,

*"முப்பதாம் ஆண்டு அளவில் மூன்று அற்று ஒருபொருளைத்*

*தப்பாமல் தன்னுள் பெறான் ஆயின்.......”*

*என்று சொல்கிறார்.*

முப்பது வயது வரையில் தான் இளமை இருக்கும்.

முப்பதுக்கு பிறகு மூப்பு தான் முன் வந்து நிற்கும்.

இதில் முப்பது என்பதை குறிப்பாக சொல்ல தான் இந்த சிந்தனை. அது என்ன முப்பது என்று கேட்கறீங்களா?

இப்போ சொல்லுங்க நீங்கள் முப்பதை தாண்டியவரா... முப்பதுக்குள் இருப்பவரா?

முப்பது வயது வரையில் தான் இளமை இருக்கும். அந்த இளமை இதோ.. இதோ.. என்று பாடினாலும் பாடாவிட்டாலும் முப்பதுக்கு பிறகு மூப்பு தான் முன் வந்து நிற்கும்.

ஆனால் பாருங்க...

ஜாதகத்தில் சந்திரன் நிற்கும் இடம் தான் ராசி. இது அநேகமாக எல்லோருக்கும் தெரிந்து இருக்கும். இந்த ராசியிலோ அல்லது அதற்கு முன்போ அல்லது அதற்கு பின்னரோ கோச்சாரத்தில் சனி வந்து விட்டால் அதை தான் ஏழரை சனி என்று சொல்லுவாங்க.. ஒவ்வொரு கட்டத்திலும் இரண்டரை ஆண்டு என்ற கணக்கின் படி இந்த ராசிக்கு 12இல் ராசியில், ராசிக்கு இரண்டில் என்று ஏழரை சனி என்று

இது மட்டுமா? ராசிக்கு எட்டாம் இடத்தில் சனி வந்துவிட்டால், அது அஷ்டம சனி என்று சொல்லுவாங்க.. ராசிக்கு நான்கில் சனி வந்து விட்டால் அதை அர்தாஷ்டம சனி (எட்டில் பாதி - நான்கு) என்று சொல்லுவாங்க..

இப்படி ஏழரை சனியோ, அர்தாஷ்டம சனியோ, அல்லது அஷ்டம சனியோ வந்து விட்டால், இந்த பத்தாண்டுகள் படாத பாடு பட்டு போயிடும்.

அதுவும் முப்பது வயதிற்குள் வந்து விட்டால், வேதனை, சோதனை, அமைதியின்மை, சோம்பல், எடுத்த எதிலும் தோல்வி, என இளமையில் முதுமையை அனுபவித்துக் கொண்டு இருப்பார்கள்.

போதும்டா சாமி... என்று அவரவர் ஜாதக அமைப்பை வைத்து கெடுபலன்கள் கூடுதலாகவோ, நற்பலன்கள் குறைவாக கிடைத்து விடும். இந்த சிக்கல் இல்லாமல் தப்பிக்க வழியே இல்லையா என்று கேட்டால், எல்லோருக்கும் இந்த வேதனை வாழும் ஒரு சமயத்தில் வந்தே தீரும்.. அது எப்போ வருகிறது என்பதை பொறுத்து, மன பக்குவம் ஏற்படும் என்பதை சொல்லி விடலாம்.

இது மட்டுமல்ல, சனி பெயர்ச்சியில் பார்வைகளையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

அதே ... அதே தான்.. என்று சனியின் தாக்கத்தில் இருப்பவரா நீங்கள். வருந்த வேண்டாம்.

சில குறிப்பான வழிபாடுகள் செய்வது வந்தால், பிரச்சனையை குறைத்துக் கொள்ளலாம்.

ஒழுக்கம் உணவு வழிபாடு என்ற நிலையில் உறுதியாக இருந்து விட்டால், கிட்ட வந்த தொல்லைகள் எட்டியே போகும். எது வந்த போதும், இனி இல்லை பயமே என்ற எண்ணம் மேலோங்கி நிற்கும்.

ஒழுக்க நிலையில் என்ன செய்ய வேண்டும் என்றால், அவரவர் வாழ்க்கை சூழலிற்கு ஏற்ப அதை செய்து கொள்ளலாம் என்றாலும் மூன்று முக்கியமானவைகளை கை கொள்ள வேண்டுமுதலாவதாக, இது முடியாதே மாற்று ஏற்பாடு ஏதாவது செய்து கொள்ளலாமா என்று compromise இல்லாமல், அப்படியே செய்ய வேண்டும்.

முதலாவதாக, வைகறையில் துயில் எழு வேண்டும். அதாங்க காலையில் சூரிய உதயத்திற்கு முன் எழுந்து உங்கள் வேலைகளை தொடங்க வேண்டும்.

இரண்டாவதாக, குறைந்த பட்சமாகவாவது நடந்து செல்ல வேண்டும். கவுரவமான பணியில் இருப்பவர்கள், எப்போதும் காரிலேயே சுற்றுபவர்கள், அல்லது நடக்க கூச்ச படுபவர்களாக இருந்தால், குறைந்த பட்சம் அலுவலகங்களில், லிப்ட் பயன்படுத்துவதை தவிர்க்க வேண்டும்.

மூன்றாவதாக தினமும் குறைந்தபட்சம் மூன்று மணி நேரம் மௌன விரதம் பேசாமல் இருக்க வேண்டும். வாய் பேச்சு மட்டும் தானே என்று டிவியை பார்த்துக் கொண்டு இருக்க கூடாது. பேப்பரில் எழுதி காண்பிப்பது என்பது போல இருக்க கூடாது. வாய் பேச்சு மட்டுமல்ல மனதும் அடங்கியே இருக்க வேண்டும்.

இந்த மூன்று ஒழுக்க நிலைகளை கடைப்பிடிக்க முடியும் என்றால், இந்த ஏழரை, அஷ்டம மற்றும் அர்த்தஷ்டமா சனி காலங்களில், பிரச்சனை உங்களை விட்டு விலகுகிறது என்பதை நீங்களே உணர்வு பூர்வமாக பார்க்கலாம்.

சரி உணவில் என்ன கட்டுப்பாடு என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. ரொம்ப சுலபமானது தான் செய்வதும் சிக்கல் இல்லை, சுவையாக சாப்பிடுவதிலும் சிக்கல் இல்லவே இல்லை..

ஆமாங்க, இட்லி தான், முழு உளுந்து போட்டு கூடவே வெந்தயமும் சேர்த்து, அரைத்த மாவிலே இட்லி அவித்து சாப்பிட வேண்டும். இதெல்லாம் கடையில் வாங்குகிற மாவில் இருக்குமா என்று கேட்காதீங்க..

இட்லி மட்டுமல்ல அதிகமான அவித்த உணவுகளை எடுத்துக் கொள்ளுங்கள். வெள்ளை எள்ளை வாரம் ஒருமுறையாவது உணவில் சேர்ந்து இருக்கட்டும்.

வழிபாடு அவரவர் மதம் அல்லது குடும்ப வழக்கப்படி அல்லது விருப்பபடி இருக்கலாம் என்றாலும், சில குறிப்புகளை தருகிறேன், உங்களுக்கு திருப்தியாக இருந்தால் அதை செயல்படுத்திக் கொள்ளலாம்.

திருஞானசம்பந்தர் அருளிய தேவார பதிகத்தில்,

*போகம் ஆர்த்த பூண் முலையாள் தன்னோடும் பொன் அகலம்*
*பாகம் ஆர்த்த பைங்கண் வெள் ஏற்று அண்ணல், பரமேட்டி,*
*ஆகம் ஆர்த்த தோல் உடையன், கோவண ஆடையின் மேல்*
*நாகம் ஆர்த்த நம்பெருமான், மேயது நள்ளாறே.*

என தொடங்கும் திருநள்ளாறு பதிகத்தினை இருவேளையும் பாடி வழிபாடு இயற்ற வேண்டும். தமிழால் முடியாதது எதுவும் இல்லை என்பதை ஆணித்தரமாக நம்புங்கள். இன்னொரு சந்தர்ப்பத்தில் தமிழில் எப்படி பாடல்கள் பரிகாரத்திற்கு துணை செய்கிறது என்று தனியாக சிந்திக்கலாம்.

முருக பெருமானை வழிபாடு செய்யும் அன்பர்கள், பாம்பன் சுவாமிகள் அருளிய "திருமலை" திருப்பதிகத்தை படியுங்கள்.

இவைகளை படிப்பதற்கு சில மணி துளிகள் போதும், இப்போதுள்ள தொழில் நுட்பத்தில், ஆடியோவில் திரும்ப திரும்ப கேட்டால் போதும், மனனம் ஆகிவிடும்.

ஆக, ஒழுக்கம், உணவு, வழிபாடு என்ற நிலையில் உறுதியாக இருந்தால், சனி பகவானால் ஏற்படும் தொல்லையில் இருந்து விடுபடலாம்.

நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்.!

# - 16 -

ஒரு தலைமுறையை உருவாக்கும் பொறுப்பு யாருக்கு இருக்கிறது என்று நினைகிறீர்கள்.. நிச்சயமாக பெண்களிடம் தான்.ஆனாலும் பாருங்க, நாளுக்கு நாள் நாகரீகம் மாறிடும் போது, நாமும் மாறிட வேண்டும் என்று நம்மை மாற்றுபவர்கள் பெண்களாக தான் இருப்பார்கள்.

போன தலைமுறை செய்த தவறுகளுக்கு இந்த தலைமுறையினர் தான் அனுபவிக்க வேண்டும் என்ற நிலையில் இருக்கும் போது, வசதியானதை செய்ய வேண்டுமா சரியானதை செய்ய வேண்டுமா என்று உங்களுக்குள் கேள்வி எழுப்பி பாருங்கள் உங்கள் விடைக்கு ஏற்ப அதனை முடிவு செய்யுங்கள்.

நீங்கள் செய்யும் முடிவு உங்களையோ உங்களை சுற்றி உள்ள உறவுகளையோ மட்டும் பாதிக்காது, அது ஒரு சமூகத்தையே பாதிக்கும் என்றால் யோசிக்க வேண்டிய விஷயமாக இருக்கிறது அல்லவா..

*“தலைவாரி பூ சூடி உன்னை பாட சாலைக்கு போ என்று சொன்னாள் உன் அன்னை”*

என்ற பாரதி தாசன் பாடல் ஒன்று நினைவுக்கு வருகிறது. இன்றைய நாளில் பெண்கள் அவிழ்ந்த கூந்தலுடன் தான் வெளியில் மட்டுமல்ல பலர் வீட்டிலும் இருக்கின்றனர், என்பதை பலரும் அவரவர் அனுபவத்தில் பார்த்து இருக்கலாம்.

சபையில் அவமான பட்ட பெண், திரௌபதி, விரித்த கூந்தலை முடியமாட்டேன் என்று சபதம் இட்டது உங்களுக்கும் தெரியும் தானே.

“விரித்த குஞ்சியர்” (கூந்தலை விரித்தபடி திரிபவர்களை அரக்கர்கள்) என்று அருணகிரியார் அருளிய திருப்பரங்குன்ற திருப்புகழில் சொல்லி இருப்பார்.

ஆக, பெண்கள், விரித்த கூந்தலுடன் இருக்க கூடாது, திரிய கூடாது என்று ஒவ்வொரு இடங்களிலும் சொல்லி இருக்கிறது என்பதை நாமும் அறிவோம்.

லுங்கி கட்டி கொண்டு வர கூடாது என்று சொல்லும் திருக்கோவில்களில் கூட, பெண்கள் விரித்த கூந்தலுடன் வந்தால் அனுமதி இல்லை என்று சொல்வதில்லை, என்பது தான் வருத்தமான விஷயம்.

சரி விரித்த கூந்தலை சோதிட பார்வையில் சிந்திப்போமா? ஏவல், செய்வினை இவைகளில், தலை முடி, நகம் போன்ற கேதுவின் காரகங்கள் முதல் வரிசையில் இருக்கிறது என்பதை அந்த விஷயங்கள் தெரிந்தவர்களுக்கு புரியும்.

தலைமுடிக்கு காரகம் வகிக்கும் கிரகம் கேது. கேது என்றாலே நமக்கு எல்லாம் தெரியும், நவ கிரகங்களிலேயே மிகவும் பலம் பொருந்திய கிரகம் பிரச்னைக்கு கூடுதல் கரம் சேர்க்கும் கிரகம் கேது தான் என்று. குடும்ப ஸ்தானத்தில் (2 ம் இடத்தில்) கேது இருந்தால், அவர்களுக்கு மன வாழ்க்கை அமையாது, சிறப்பாக இருக்காது என்பதை பொதுவாக சொல்லி விடலாம்.

எப்போதுமே கேதுவை கட்டி வைக்க வேண்டும் ராகுவை அவிழ்த்து வைக்க வேண்டும், அது தான் ஆரோக்கியமான வாழ்வியல் முறை.

இந்த கேது கிரக காரக தன்மை கொண்ட அனைத்தும் கட்டி வைத்த படியே இருக்க வேண்டும் என்பது தான் குறிப்பு. அதனால் கேது கிரகம் காரகம் வகிக்கும், தலைமுடியை விரித்து படி பெண்கள் திரியாமல் அதை கட்டி வைக்க வேண்டும் என்பது தான் குறிப்பு.

இதனால் தான் பண்டைய நாட்களில், தலை முடியை சீவி, பின்னலிட்டு, ரிப்பன் வைத்து கட்டி வைப்பார்கள் ரப்பர் பேண்டு, அப்புறம் ஹேர் பேண்டு என்ற நிலை மாறி வெறும் கிளிப் என்ற நிலையும் கடந்து விரிந்த கூந்தலுடன் பெண்கள் செல்வது பிரச்சனை அவர்களுக்கும், வேண்டுமா என்ன?

பெண்கள் இப்போ விரித்த கூந்தலுடன் செல்வதால், அது அவர்களுக்கு மட்டும் அல்ல அடுத்த தலைமுறைக்கும் தவறான வழிகாட்டுதலை செய்து, ஒன்றை விட்டு விட்டு சென்று விடுவார்களோ என்ற பயம் சமூக அக்கறை உள்ளவர்களிடம் இல்லாமல் இல்லை.

சரி ஐயா, நீங்கள் சொன்னால் அவர்கள் கேட்க போகிறார்களா? என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. உண்மை தான்.. யாருமே சொல்லவில்லை என்றால்

அவர்களுக்கு தவறு எது என்றே தெரியாமலே அதை செய்து கொண்டு தான் இருப்பார்கள். யாருமே சொல்லாவிட்டால் எப்படி? நாமாவது சொல்லி வைப்போமே, என்ற எண்ணம் தான்.

தவறு தான் என்று தெரிந்து அவர்கள் தொடர்ந்து செய்வார்களே ஆனால், இனி செய்ய கூடாது என்ற எண்ணம் தானே வரும், அதுவே திருத்தமாக அமையும். இது தான் உண்மை. திருத்தம் அவர்களிடமே இருந்து வந்தால் தான் அது மாற்றத்தை ஏற்படுத்தும். அதனால் தவறுகளை சுட்டி காட்ட தயங்க கூடாது. சரியானதை எடுத்து சொல்ல மயங்க கூடாது.

உண்மையை சொல்வதானால், “சொன்னால் கேட்க கூடியவர்கள் பெண்கள்”. அவர்களுக்கு அவர்கள் ஏற்றுக் கொள்ளும் மன நிலையில், அந்த பாணியில் சொல்ல வேண்டும் அவ்வளவு தான்.

தலை முடி மட்டுமல்ல.. நீளமான உடைகளும் கேது காரகம் வகிப்பது தான். உதாரணமாக, நீளமாக சேலை, சுடிதார் பேன்ட் இது போல, அதனால் தான் சேலை கட்டும் பெண்கள் அன்றைய நாளில், முந்தானையை முடிந்து இடுப்பில் செருகி வைப்பார்கள்.

கேதுவை கட்டி வைக்க வேண்டும் என்பது தான் குறிப்பு. இன்றைய நாளில் சேலை கட்டும் பெண்கள் குறைந்து விட்டது. கல்யாணத்தின் போது மட்டும் தான் சேலை கட்ட வேண்டும் என்பது எழுதாத சட்டமாகி விட்டது. அதுவும் காதல் கல்யாணம் பதிவு திருமணம் என்றால், அதற்கும் வேலை இல்லாமல் போய்விட்டது.

சுடிதாரில் பாருங்கள் ஒன்றை ஒன்று சார்ந்து இருக்காது, சுடிதார் பேன்ட், டாப்ஸ் உடன் சேராமால் தனியாக இருக்கும். துப்பட்டா டாப்ஸ் உடன் சேராமல் தனியாக இருக்கும்.

இப்படி ஒன்றை ஒன்று சேராமல் இருந்தால், மனம் ஒன்றாத வாழ்க்கைக்கு அல்லவா வழி காட்டும். இந்த சுடிதார் கலாச்சாரம், சின்ன குழந்தைகளிடம் கூட அதுவும் கிராமத்து குழந்தைகளிடம் கூட பரவலாக வளர்ந்து விட்டது. பள்ளிகளில் கூட சீருடையாக வைத்து விட்டார்கள் என்றால் வருந்தாமல் இருக்க தான் முடியுமா என்ன.!?

மெல்லிய துணிகளை கொண்டு, கேதுவின் காரகமாக உடைகளை வடிவமைத்து, இது தான் பேஷன், இது தான் பாதுகாப்பு என்றால் சோதிட பார்வையில் இது நிம்மதியற்ற குழப்பமான வாழ்க்கைக்கு தடையை தான் கொடுக்கும், என்பதை மதி நிறைந்தவர்கள் மறுக்க மாட்டார்கள்.

வீட்டில் வழிபாடு செய்யும் போது கூட ஒற்றை ஆடைகளை அணிய கூடாது என்பது தான் ஆச்சாரம், என்பதை நாம் அறிவோம் அல்லவா.

நீளமான துணிகள் எல்லாம் கேதுவின் காரகம் தான் பேன்ட், நைட்டி, துப்பட்டா என ஒரு குட்டி பட்டியலே தரலாம். உணர்வுகளின் வெளிப்பாடு தான் உடைகள். அதை சொல்வது தான் தமிழ் கலாச்சாரம். அதன் படி வாழ்க்கை அமைந்தால் வாழ்வில் மகிழ்ச்சி மட்டுமல்ல. ஆனந்தமும் கொண்டாடும் இடமாக வீடு இருக்கும்.

வளமான நிம்மதியான வாழ்வுக்கு தடை செய்யும் கேதுவை அதன் காரகமாக உள்ள சுடிதார், நைட்டி, விரித்த கூந்தல் என வீட்டுக்குள் விருந்தாளி போல வரவழைத்தால், வரக்கூடிய கெடுபலன்களை எழுதி தான் சொல்ல வேண்டுமா என்ன.?!

சரி பெண்கள் உடைகளை பற்றி மட்டும் சொல்றீங்களே ஆண்களை உடைகளை பற்றி சிந்திக்க வேண்டாமா என்று கேட்பது காதில் விழுகிறது, அதை இன்னொரு சந்தர்ப்பத்தில் பகிர்ந்து கொள்வோம்.

இது வரை எப்படி இருந்தாலும் சரி, உடனே மாற முடியாவிட்டாலும் சரி, அடுத்த தலைமுறையினரை உருவாக்கும் மிகப்பெரிய பொறுப்பில் உள்ள பெண்கள் தங்களை மாற்றிக் கொண்டு, நல்வழி காட்டுவார்கள் என்று நம்புவோம். ஒரே நாளில் மாற முடியாது தான்,

முதலில் விரித்த கூந்தலுடன் செல்வதை தவிர்ப்போம் அதை தொடர்ந்து ஒவ்வொன்றாக செயல்படுத்துவோம் என்று ஆரோக்கியமான அடுத்த தலைமுறை உருவாக வேண்டும் என்ற பொறுப்பில் உள்ள ஒவ்வொரு பெண்ணினமும் நினைத்தால் இது சாத்தியப்படும். புரிந்தவர்கள் புத்திசாலிகள்.

நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்.!

# - 17 -

கடலால் சூழந்த உலகம் நமக்கு சொந்தமானது என்றால், அப்போ அந்த கடல் யாருக்கு சொந்தம் என்று கேட்கும் பேராசை காரர்கள் நிறைந்தது தான் இந்த உலகம்.

எத்தனை சம்பாதித்தாலும் போதாது, எத்தனை பணம் இருந்தாலும் போதாது என எழுபது வயதிற்கு பிறகும் முதல் இடத்தில் இருக்க வேண்டும் என்று நினைக்கும் சிலரை நினைத்து சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

இப்போ பாருங்கள் இந்த உலகம் பஞ்ச பூதங்களினால் ஆனது. அதாவது நெருப்பு,  நிலம் காற்று, நீர் மற்றும் ஆகாயம் என ஐந்து இயற்க்கை அமைப்புகளால் ஆனது. இதை ஏன் பூதங்கள் என்று சொன்னார்கள் என்பதை இன்னொரு சமயத்தில் சிந்திப்போம்.

இந்த ஐந்தையையும் வைத்து தான் சோதிட கட்டத்தில் நமக்கு ராசியில், இடங்களை பொருத்தி தந்து இருக்கிறார்கள் சோதிட வல்லுனர்கள். இதில் கால புருஷத்திற்கு 1-5-9 என்று சொல்லும் மேஷம் சிம்மம், தனுசு "நெருப்பு" ராசியாகவும், மிதுனம் துலாம், கும்பம் "காற்று" ராசியாகவும் சொல்லுவார்கள்.

இதே போல, ரிஷபம், கன்னி, மகரம் "நில" ராசியாகவும், கடகம், விருச்சிகம், மீனம் "நீர்" ராசியாகவும் சொல்லுவார்கள்.

சரிங்க ஐயா இதை எப்படி நினைவில் வைத்து கொள்வது என்று கேட்பவர்களுக்காக இந்த தகவல். FLAW (F-Fire; L-Land; A-Air; W-Water) என்று நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இதை  Mnemonic என்று ஆங்கிலத்தில் சொல்லுவார்கள்.

இந்த பட்டியலில் ஆகாயமிருக்காது ராசி மண்டலமே ஆகாயத்தில் இருப்பதால் அதற்கு தனியாக ராசி இல்லை என்பதை சொல்லாமலே புரிந்து கொள்ள முடியும்.

இதில் கவனிக்க வேண்டியது என்ன என்றால், ஆண் ராசிகள் நெருப்பாகவும், காற்றாகவும் இருக்கும். பெண் ராசிகள் நிலமாகவும் நீராகவும் இருக்கும்.  ஆண்

ராசியின் தன்மைக்கு எதிராக பெண் ராசியின் தன்மை இருக்கும். இது தான் சோதிட வல்லுனர்கள் அமைத்த முறை.

ராசியின் இயல்பு தன்மை அந்த ராசியை சேர்ந்தவர்களுக்கு இயல்பாக அமையும் என்றாலும், இதை மட்டும் வைத்துக் கொண்டு பலன் சொல்ல முடியாது, ஆனால் மற்ற பலன்கள் சொல்ல இது உதவியாக இருக்கும், என்பதால் இங்கே குறிப்பிட்டு சொல்ல வேண்டியது உள்ளது.

சோதிட பாடத்தில், இது பால பாடத்தில் வரும், அதை படித்து விட்டு பலரும், அப்படியே விட்டு விடுவார்கள். ஆனால் இங்கே சில குறிப்புகளை சொல்வதற்கு தான் இதை இந்த வார சிந்தனைக்கு எடுத்து தருகிறோம்.

Software, BPO, KPO போன்ற இது போன்ற நிறுவனங்களில், அல்லது ஒரு குழுவாக பணி செய்யக் கூடிய இடங்களில், TL (Team Leader) இருப்பார்கள், அவர்களுக்கு கீழே பணியாளர்கள் இருப்பார்கள் இந்த குழுவில் உள்ளவர்கள் ஒத்த தன்மை கொண்டு இருந்தால், அந்த குழு வெற்றி பெறும். இது போல ஒரு project-ல் இருந்து வேலை செய்பவர்கள் இதனை வைத்து புரிந்து கொள்ளலாம்.

நீரும் நெருப்பும் சேர்ந்தால் என்ன ஆகும் என்று சொல்லி தெரிய வேண்டியது இல்லை. நெருப்பும் காற்றும் சேர்ந்தால் என்ன ஆகும் என்று எடுத்து சொல்ல வேண்டியது இல்லை. மற்றது உங்கள் சிந்தனைக்கு...

இதை வைத்து திருமண பொருத்தமும் பார்த்து கொள்ளலாமா என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. அதற்கு, தசவித பொருத்தம், தோஷ சாம்யம், பாப சாம்யம், யாம சுக்கிரன் என்று பல நிலைகள் உள்ளது. இன்னொரு சந்தர்ப்பத்தில் அது பற்றி சிந்திக்கலாம். அது சரி, காதல் கல்யாணம் என்ற நிலை வந்த பிறகு திருமண பொருத்தம் எப்படி, காதல் பொருத்தம் தானே என்று கேட்பவர்களுக்கு வேறு பதில் உண்டு; அதை இன்னொரு சந்தர்ப்பத்தில் சிந்திப்போம்.

இந்த அமைப்பு ராசிக்கு மட்டுமா என்று கேட்காதீர்கள் கிரகங்களுக்கும் உண்டு. அதாவது சூரியனும், செவ்வாயும், கேதுவும் “நெருப்பு’, சந்திரனும் சுக்கிரனும் “நீர்”. நிலத்திற்கு குரு, புதன் சனி, ராகு “காற்று”. ராகு மட்டும் நெருப்பாகவும் வரும் காற்றாகவும் வரும்.

பொதுவாக ஒரு ஜாதகத்தில் ஒரு கிரகம் எந்த நட்சத்திர சாரத்தில் இருக்கிறதோ அந்த ராசியில் தான் இடம் பிடிக்கும். அது எந்த கிரகத்தின் தன்மை அது வந்து அமர்ந்த ராசியின் தன்மை என்பதை அறிந்து கொண்டால், அடிப்படையில் சில விஷயங்கள் கோடிட்டு காட்ட முடியும். இதனால் அந்த ஜாதகரின் இயல்பு தன்மை வெளிப்படும். அவரது எண்ணங்கள், செயல்பாடுகள் புரிந்து கொள்ள முடியும்.

புரிந்து கொள்வதற்காக ஒன்றை சொல்கிறேன் சரியாக உள்ளதா சிந்தித்து பாருங்கள், ஒரு ஜாதகம், (ஜாதகத்தை போட்டு காட்டப் போவது இல்லை) அது மிதுன லக்கினம், அதில், வாழ்க்கை துணையை நண்பர்களை குறிக்கும் ஏழாம் பாவகம், தனுசு ராசி, இந்த ராசியில் நெருப்பு கிரகமான, சூரியன், செவ்வாய், உடன் காற்று கிரகமான புதனும் இருக்கிறது இத்துடன் நீர் கிரகமான சுக்கிரனும் இருக்கிறது.

இப்போ ராசியின் தன்மை, மற்றும் கிரகத்தின் தன்மையை மனதில் வைத்துக் கொண்டு சிந்தித்து பாருங்கள் இவருடைய மண வாழ்க்கை எப்படி இருக்கும் என்று. “அந்தோ.. பாவம்” என்று சொல்வதை தவிர வேறு என்ன சொல்ல.

ஆக, ஒரு ஜாதகத்தை பார்த்தவுடன், ராசியின் தன்மைகள், கிரங்களின் தன்மைகள், எந்த தன்மை உள்ள கிரகங்கள் எந்த தன்மையில் உள்ள ராசியில் அமர்ந்து இருக்கின்றன. அவை எந்த கிரகங்களுடன் சேர்ந்து இருக்கின்றன என்பதை அடித்தளமாக கொண்டு பலன் சொல்ல அணுகும் போது, பலன் சொல்வதும் சுலபம். அந்த பலன்கள் அமைவதும் சரியாக இருக்கும்.

மண்கலம், வெண்கலம், அலுமினியம், இரும்பு, எவர் சிலவர் என சமைக்கும் பாத்திரங்கள் முறை பலவாறாக இருந்தாலும், சமைக்க கூடிய உணவுகள் பலவிதமாக இருந்தாலும் சமைக்க கூடிய பாத்திரத்தின் தன்மையை ஒட்டி அதன் சுவை வேறுபாடும் என்பது சாப்பாட்டு பிரியர்களுக்கு தெரியும்.

வாழ்க்கை என்பது சாப்பாட்டை போல ருசியானது. அது எந்த பாத்திரத்தில் செய்தது என்பதை ஒட்டி சுவை மாறும். அது போல கிரகங்களின், மற்றும் ராசிகளின் தன்மைகளை ஒட்டி அந்த பாவகத்தின் குறிப்பை அறிந்து கொண்டால் பலன் சொல்லும் முறையும், பயனுள்ளதாக இருக்கும். தொடர்ந்து சிந்திப்போம்.

நம்பிக்கையுடன் இருங்கள். நல்லதே நடக்கும்.!

எந்த உயிராக இருந்தாலும், பிறப்பு என்று ஒன்று இருக்குமானால், நிச்சயமாக இறப்பு இருந்தே தீரும் என்பதில் எந்த மாற்றுக் கருத்தும் இல்லை. இராமனையும், கிருஷ்ணனையும், புராணங்களில் நமக்கு காட்டும் போதும், இதே சிந்தனையை நமக்கு சொல்லாமல் இல்லை.

இருக்கும் போது, மகிழ்ச்சியாக வாழ விரும்புவர்கள், இறந்த பிறகு என்ன ஆகிறோம் எங்கே போகிறோம் என்பது தெரியாமலே வாழ்ந்து விடுகிறார்கள்.

முற்பகல் செய்யின், பிற்பகல் விளையும் என்பது போல, அவரவர் நல்வினை தீவினைப் பயனாக வினைகளை அனுபவித்தே ஆக வேண்டும், இதனை, சிவஞான சித்தியார்,

“பேறு, இழவு, இன்பமோடு,பிணி மூப்பு சாக்காடு இவ்வாறும் முன் கரு உட்பட்டவாறு” என்கிறது. (பேறு-நற்பேறு; இழவு-இழப்பு, இன்பம்-மகிழ்ச்சி, பிணி-நோய், மூப்பு-முதுமை, சாக்காடு-மரணம்).

மரணம் அல்லது இழப்பு என்றால் ஒரு வகையில் பயம் இருக்க தானே செய்கிறது. இந்த வகையில் இவர் இறக்க வேண்டும் என்று எழுதி வைத்த கூற்றை எடுத்து படிக்க முடியாது என்றாலும் இறந்தபிறகு அந்த உயிர்களுக்கு செய்யும் கடன்கள் தான் இந்த வார சிந்தனைக்கு தருகிறோம்.

அது தான் வாழும் இந்த இல்லறம் நல்லறமாக அமைய துணை செய்யும். இல்லறம் சிறக்க தெய்வப்புலவர்; "தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் தான் என்று ஆங்கு ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை'' என சொல்வது நமக்கு தெரியும் தானே.

பிதிரர்க்கும், தெய்வத்திற்கும், விருந்திற்கும், இனத்திற்கும், தனக்கும் என்று கூறி இல்லறத்தானின் கடமைகளுள் ஒன்றாக பித்ருக்களுக்கான வழிபாட்டை சொல்லி இருக்கிறார் என்றால் இதனை அப்படியே விட்டு விடலாமா?

அதனால் பிறப்புக்கு செய்யும் சிறப்புகளை, பிறந்த போதும், வாழும் போதும் செய்வது போல, இறப்புக்கும், அதன் பிறகும் செய்ய வேண்டும் என்பது சொல்லாமலே புரியும்.

இந்த நன்றி தெரிவிக்கும் செயல்கள் தான் வழிபாடு. எல்லா உயிர்களும் நன்றி உணர்வை வெளிக்காட்டும் இல்லையா. சரி இருப்பவர்களுக்கு தானே நன்றி சொல்ல வேண்டும். இல்லாதவர்களுக்கு எதற்கு சொல்ல வேண்டும்? சொன்னால் அவர்களுக்கு எப்படி போய் சேரும் என்பது போல எதிர்வாதம் பேசுபவர்களுக்கு தனியாக தொடராகவே எழுதலாம்.

ஒரு வருடத்தை இரண்டு அயனங்களாகப் பிரித்துள்ளனர். தை முதல் ஆனி வரை உள்ள ஆறு மாதம் “உத்தராயண காலம்” (வடக்கு) என்றும், ஆடி முதல் மார்கழி வரை உள்ள காலம் “தட்சணாயன காலம்” (தெற்கு) என்றும் அழைப்பர். உத்தராயணத்தின் தொடக்கம் தையாகவும் தட்சணாயத்தின் தொடக்கம் ஆடியாகவும் வருவதால், ஆடி-தை அமாவாசை வழிபாட்டில், முக்கியத்துவம் பெறுகிறது.

சோதிட ரீதியாக தந்தையை குறிக்கும் கிரகமான சூரியனும், தாயை குறிக்கும் கிரகமான சந்திரனும், சேர்ந்து இருக்கும் காலம் தான் அமாவாசை திதி என்று சொல்லப்படும்.

ஒரு ஆண்டில் செய்ய வேண்டிய தர்பானாதி கர்மாக்களை முழுவதும் செய்ய முடியாவிட்டாலும் முக்கியமாக ஆடி அமாவாசை, தை அமாவாசை, மற்றும் மஹாளய அமாவாசை ஆகிய தினங்களில் செய்தே ஆக வேண்டும்.

இன்றைய நாளில், இதனை முறையாக செய்து வைப்பவர்களும் இல்லை. அவசரமாக எல்லோரையும் ஒன்றாக உட்கார வைத்து, எதையோ சொல்லி எதையோ செய்து விட்டு, தன் கடமை முடிந்து விட்டது என்பது போல, கூலிக்கு வேலை செய்வது போல அவர்களும் இருப்பதால், பலருக்கும் இந்த வழிபாட்டின் முக்கியத்துவம் தெரியாமல் போய்விட்டது. பிரச்சனை என்று வரும் பொது தான் பிராயச்சித்தம் தேடுகின்றனர். அதையும் இதே போல இன்னொரு முறையில் செய்து பலன் கிடைக்காமல் வருந்துகின்றனர்.

சிலர் இது போன்ற அமாவசை தர்ப்பணம் செய்யாமல் இருப்பதற்கு இதுபோல, நொண்டி சமாதானங்களை சொல்லிக் கொள்வார்கள்.

அவர்கள் தான் இறந்து விட்டார்களே அவர்களுக்கு இதை செய்தால் தெரியவா போகிறது என்று வறட்டு வாதம் பேசுவார்கள். இன்னும் சிலர் ஐயர்கள் கிடைப்பதில்லை இருப்பவர்களும் சரியாக செய்வதில்லை எல்லாம் பணமா போச்சு சார்.. என்று தான் தான் தவறிய கடமைகளுக்கு நியாயம் சொல்லிக் கொண்டு இருப்பார்கள்.

ஏதோ தமிழ் மீது பற்று உள்ளவர்கள் போல, என்னமோ வேற மொழியில் சொல்றாங்க சார். நம்மையும் சொல்ல சொல்றாங்க, அவுங்களுக்கு புரியுதோ, இலையோ, நமக்கு ஒன்னும் புரியவில்லை. ஏதும் புரியாமல் சொல்லியோ, செய்தோ என்ன பயன் என்று தான் செய்வதில்லை என்று சிலர் இருப்பார்கள்.

நாலு பேருக்கு சாப்பாடு வாங்கி கொடுத்தால் போச்சு சார்.. இதுக்கு போய் எதுக்கு இத்தனை மெனக்கிட வேண்டும் என்று சிலர், நைட் ஷிப்ட் பார்க்கிற எங்களால், இதெல்லாம் செய்ய முடியுமா சொல்லுங்க, என்ன செய்யணுமோ அதை நீங்களே செய்து கொள்ளுங்கள். இந்தாங்க பணம் என கொட்டும் ஐடி துறை இளைஞர்கள்,

இது போல சொல்லும் யாராக இருந்தாலும் பெற்றோர்கள் இல்லாதவர்கள், அமாவாசை தர்ப்பணம் செய்தே ஆக வேண்டும்.

அப்படி செயாவிட்டால் என்று கேட்க தொடங்கினால், அதனால் வரும் சிக்களைகளை பட்டியலிட்டு சொன்னால் பயமாக தான் இருக்கும். இருந்தாலும் புரிதாலுக்காக இப்படி சொல்லலாம். வசதிகள் இருக்கும் வாரிசு இருக்காது; அறிவும் திறமையும் இருக்கும் வாய்ப்பு கிடைக்காது, எடுத்தவை எல்லாம் தடங்கலில் முடியும், முன்னேற்றம் எல்லாம் தடுமாற்றமாகும்.

கொலை, தற்கொலை, விபத்து, மருத்துவம் போன்ற ஏழு நிலையில் ஏற்படும் மரணத்தில் இவர் இந்த கதி அடைந்தார் என்பதை புண்ணிய சக்கரம் போட்டு பார்த்து அல்லது பிரச்சனம் போட்டு சொல்லுவார்கள்.

இறந்த போதும், இறந்த பிறகும், செய்ய வேண்டிய கர்மாக்களை செய்யாமல் இருந்தாலும், அமாவாசை தர்ப்பணங்கள் செய்யாமல் இருந்தாலும், தோஷம் அல்லது சாபம் என்ற நிலை ஜாதகத்தில் இருந்து தெரிந்து கொள்ளலாம்.

ஒரு ஜாதகத்தில் 5 மற்றும் 11 ஆம் அதிபதிகள் பாதக ஸ்தானங்களில் இருப்பது, சூரியன் சந்திரன் நீசமாக இருப்பது, திரிகோணத்தில் சர்ப்ப கிரகங்கள் இருப்பது சனி தொடர்பான சர்ப்ப கிரகங்கள், ஒளி கிரகங்களுடன் தொடர்புடைய இருள் கிரகங்கள், சூரியன், சந்திரன் சஷ்டாஷ்டகத்தில் இருப்பது, என பல நிலைகளில் இதன் பாப, சாப, தோஷ தன்மைகளை சொல்லி விடலாம்.

பித்ரு தோஷம், பித்ரு சாபம் மற்றும் சர்ப்ப தோஷ நிவர்த்திகளுக்கு முன்னோர் வழிபாடு அவசியம், என்பதை ஒவ்வொருவரும் புரிந்து கொண்டு அதன்படி அமாவாசை வழிபாடு இயற்ற வேண்டும்.

இதுவரை இதுபோல செய்ய வில்லை என்றாலும், இப்போ உங்களுக்கு ஒரு வாய்ப்பு உள்ளது. வருகிற ஆடி அமாவசை அன்று இந்த வாய்ப்பை பயன்படுத்திக் கொண்டு, அமாவாசை வழிபாடு செய்யுங்கள். அனைத்து நலன்களையும் பெறுங்கள்.நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 19 -

காதல் என்பது எதுவரை..? கல்யாண காலம் வரும் வரை...! என்று ஒரு பழைய சினிமா பாடல் வரும்..

இன்றைய நாளில் காதல் என்பது இதுவரை என்று தான் ஆகி விட்டது. காதல் என்பது தமிழர் கலாச்சாரத்தில் உள்ளது தான் என்பதை சங்க இலக்கியங்களில் இருந்து தெரிந்து கொள்ளலாம்.

முன்பெல்லாம் கூட காதலர்கள் இருந்தார்கள். காதல் தோல்வி என்றால் தற்கொலை என முடிவு செய்துவிடுவார்கள். அடுத்த கால கட்டத்தில், காதல் சோகம் என தாடி வைத்த படி வாழ்க்கையை கழித்தார்கள். அதற்கு அடுத்த கால கட்டத்தில், எங்கிருந்தாலும் வாழ்க என்ற மன நிலைக்கு வந்து விட்டார்கள். இன்றைய நாளில் விவாகரத்து செய்து விட்டு வரும் வரை காத்திருக்கிறேன் என்ற நிலையில் இருக்கிறார்கள்.

அது சரி இதெல்லாம் சரியா...? என்ற லாஜிக் இல்லாமல் அப்படியே ஏற்றுக் கொண்டு வாழ பழகி விட்டோம் என்றாலும், சில அடிப்படைகளை தெரிந்து கொள்ளாமல் இருக்கலாமா?

திருமண வயதை தொட்டவர்கள், ஜாதக பொருத்தம் பார்ப்பது என்ற முக்கியமான கட்டத்தை கடந்து தான் ஆக வேண்டியது உள்ளது. திருமண பொருத்தம் என்றதும் தசவித பொருத்தம் என்று சொல்லும் பத்து வித பொருத்தங்களை வைத்து காலம் காலமாக சோதிட வல்லுனர்கள் பார்த்து வருகிறார்கள்.

காதல் நிலை மாறுகிறது, வாழ்க்கை முறை என எல்லாம் மாறும் போது, திருமண பொருத்தம் பார்க்கும் சோதிட, முறையில் மட்டும் மாற்றம் இல்லாமலா இருக்கும்.

ஒரு பெண்ணிற்கு ஆண் நண்பர் இல்லை என்றால் அது கௌரவ குறைச்சல், அதே போல ஆணுக்கும் என்ற கலாச்சார நிலையை இவர்களாகவே ஏற்படுத்திக் கொண்ட பிறகு, இது எல்லாம் பெரிய விஷயமாக படுவதில்லை. அதனால் தான் காதல் திருமணங்களும் முன்பை விட அதிகமாகி விட்டன.

காதல் திருமணங்களை பெற்றோர்களே அனுமதிக்கிறார்கள். இன்னும் சிலர் அவர்களே முடிவு எடுத்து திருமணம் செய்து கொண்ட பிறகு குடும்ப கௌரவத்திற்காக, வீட்டை விட்டு வெளியே போனவர்களை அழைத்து, இவர்கள் மறுபடியும் திருமணம் செய்து வைக்கிறார்கள்.

இது போன்ற நிலையில் தசவித பொருத்தம் பொருந்துமா என்ற சிந்தனை நமக்கு எட்டாமல் இல்லை. அதனால் தான் தச வித பொருத்தங்களுடன், வேதை பொருத்தம், தோஷ சாம்யம், பாவ சாம்யம், யாம சுக்கிரன், என்பனவற்றை சேர்த்து முஹூர்த்தமும் குறிக்கப்பட வேண்டும்.

தொடக்க நாளில் திருமணம் என்பது அறம்/தர்ம காரியங்கள் செய்வதற்கு தான் இருந்தது. அதனால் அறம் வளர வேண்டும் விருத்தியாகும் வம்ச வாரிசுகளும் தர்ம காரியங்கள் செய்து நாடு செழித்து வளர வேண்டும் என்று இத்தனையும் பார்த்தார்கள். ஆனால் இன்றைய நாளில் திருமணம் என்பது, பையனுக்கு இவ்வளவு சம்பளம், பெண்ணிற்கு இவ்வளவு சம்பளம், ஒரு குடு பம் நடத்த இது போதுமா? என்று வியாபாரமாகி விட்டது.

எது எப்படி இருந்தாலும், அடிப்படையில் சில மாறாது. அதை இன்றைய நடைமுறை சூழலுக்கு ஏற்ப உள்ள அணுமுறையில் கையாண்டால், சிக்கல் இல்லை என்பதை மறுப்பவர்களும் யாரும் இருக்க மாட்டார்கள்.

அடிப்படையில், குடும்ப வாழ்க்கைக்கு பத்து முக்கிய அம்சங்கள் தேவை. அவை புரிந்து உணர்தல், நம்பிக்கை கொள்ளுதல், மகிழ்ச்சியாக வாழ்தல், ஆரோக்கியமான வாழ்வு, வம்ச விருத்தி, ஏற்றமிகு வாழ்வு, உறவுகளை பேணுதல், சவால்களை சந்தித்தல், நீண்ட ஆயுள், நிறைவான அறப்பணி என்பன. வேறு எதை பட்டியல் படுத்தினாலும் அதை இந்த பத்திற்குள் கொண்டு வந்து விடலாம்.

இந்த ஒவ்வொரு அம்சங்களையும், சோதிட ரீதியாக உள்ள குறிப்புகளை உளவியல் ரீதியாகவும் அணுகி ஜாதக பொருத்தம் பார்த்தால், திருமண பொருத்தம் என்பது ஏற்புடையதாக இருக்கும். நிலையை

ஒரு சில குறிப்புகளை சொல்கிறேன் சரியாக உள்ளதா சொல்லுங்கள். ஒரு பெண்ணின் மனநிலையை சந்திரன் சுக்கிரன், கேது என்ற மூன்று கிரகங்களின் தன்மையில் சொல்லிவிட முடியும். ஒரு ஆணின் மனநிலையை குரு சந்திரன், ராகு மற்றும் கேது என்ற கிரகங்களின் தன்மையில் சொல்லிவிட முடியும்.

இந்த இரண்டில் மன ஒற்றுமை வந்தாலே அடுத்த கட்ட பொருத்தம் பார்க்க சென்று விடலாம். அதை விடுத்து பத்துக்கு ஆறு என்று மதிப்பெண் போட்டு மணப்பொருத்தம் பார்ப்பது ஒரு சடங்காக இருக்குமே தவிர சுபமான தீர்வை கொண்டு தராது.

இந்த மன ஒற்றுமை என்பது காதல் சொல்ல வரும் நிலையில் இருந்தே தொடரும். அதனால் தான் பல பெண்கள் இருக்கும் கூட்டத்தில் கூட ஒரு பெண்ணை மட்டுமே தேர்வு செய்யும் இளைஞர்கள் இதை மறுப்பது இல்லை. இதே போல பெண்களும் என்பதை புரிந்து கொள்ளலாம்.

இவரை திருமணம் செய்து கொள்ளலாமா என்று கேட்க வரும் ஆணும் பெண்ணும், இவரை காதலிக்கலாமா என்று கேட்க

வருவதில்லை. காரணம் இந்த கிரக குண இயல்பு அடிப்படை தன்மை தான்.

சந்திரன் கேது செல்பி பிரியர், செவ்வாய் சுக்கிரன் காம சிந்தனை, சந்திரன் தொடர்பும் வந்து விட்டால் கனவில் கூட இப்படி தான் என்று சொல்லிவிடலாம். மேஷத்தில் ராகு, குறுக்கு புத்தி, இப்படி ஜாதகரின் மன நிலை உணர்வு நிலை இவைகளை பட்டியல் படுத்தி இது உளவியல் ரீதியாக பொருந்தி வரும் ஜாதகத்தை பொருத்தி பார்த்தால் முறிவு இல்லாத வாழ்க்கை, சிக்கல் இல்லாமல் இருக்கும்.

இன்றைய நாளில் திருமண பந்தம் என்பது ஒரு ஒப்பந்தம் போல ஆகி விட்டது. இதில் இத்தனை வருடம் என்பதை சிலரும், மறுமணம் செய்து கொள்ளும் பலரும், இருப்பதை விட கூடாது என்று சிலரும், பாதுகாப்பான வாழ்க்கை என்று கூட்டுக்குள் சிலரும் என இந்த கால நிலை விரும்பியோ விரும்பாமலோ ஏற்றுக் கொள்ள பழகி கொள்ள வேண்டும்.

இது சரியா, இது முறையா, இதை மாற்ற வேண்டாமா என்ற வீண் முயற்சிகள் எல்லாம் செய்யாமல் முடிந்தால் அப்படியே ரசித்து, கழித்து விட்டு போக வேண்டியது தான் புத்திசாலித்தனம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

நாம் எத்தனை உண்மையாக இருந்தாலும் சரி, நேர்மையாக இருந்தாலும் சரி, நல்லதே சொன்னாலும் சரி, யாரும் நாம சொல்றதை யாரும் கேட்கிறதே இல்லை, ஒரு மரியாதைக்கு கூட தலை ஆட்ட மாட்டேன் என்கிறார்கள் என்று அங்கலாய்த்துக் கொள்பவர்கள் இருக்கிறார்கள். அவர்களை பற்றி இன்னொரு வாய்ப்பில் சிந்திக்கலாம்.

அது என்னனேனு தெரியவில்லை.. இவர் சொன்னால் எல்லோரும் தலை ஆட்டுகிறார்கள். சொல்வதெல்லாம் பொய் என்று தெரிந்தாலும் கூட எந்த லாஜிக்கும் இல்லாமல் அவர் சொல்வது போலவே கேட்கிறார்கள் என்று சிலரை நாம் பார்த்து சொல்லி இருப்போம்.

அவர்கள் யார் என்று உங்களுக்கு தெரிகிறதா? வாயால் வடை சுட் , அதிரசத்தை அட்டையில் வரைந்து இனிப்பாக இருக்கு என்று சொல்லி, காலி டம்பளரில் காபி எடுத்து குடித்து கையையும் தட்டி விட்டு நம்மையும் கை தட்ட சொல்லும் அந்த சிலரை நீங்களும் அறிந்து இருப்பீர்கள்.

ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தாலும், ஏற்ற மிகு குடும்பத்தில் வளர்ந்தாலும் இது போல அதிகார பதவியில் இருப்பதற்கும், சொன்னால் கேட்டு தலையாட்டும் மக்களை பெறுவதற்கும் நல்ல யோகம் வேண்டுமப்பா என்று சொல்வதை கேட்டு இருக்கலாம்.

அட ஆமாங்க.. அவரை தான் நினைத்து கிட்டு இருந்தேன் என்று நீங்கள் சொல்றீங்க புரிகிறது.

யோகம் என்பது சோதிடத்தில் பல நூறு உள்ளது அவற்றுள் சில தான் பழக்கத்தில் பலரும் கையாள்வது. அதில் ராஜ யோக அமைப்பு கொண்ட யோகம் மிக சில தான் அதில் ஒன்று தான் “சிவராஜ யோகம்”. யோகம் என்பது சேர்க்கை என்ற பொருள் கொண்டு வரும். ஒன்றுக்கு

மேற்பட்ட கிரகங்கள் சேர்க்கை பெறும் போது, அல்லது பாவ தன்மை இல்லாத தொடர்பு கொள்ளும் போது, ஒளி கிரகங்களின் பார்வை படும் போது, அந்த ஜாதகருக்கு இந்த யோகம் சிறப்பாக பலனை கொண்டு தரும்.

இந்த சிவராஜ யோகம் ஒரு ஜாதகத்தில் அமைவது பொதுவாக சிறப்பானது என்று சொல்ல படுகிறது. இந்த சிவராஜ யோகம் அமைந்து லக்கினாதிபதியும் பலமாக அமைந்து விட்டால், அவரை தொட்டு பிடிக்க யாராலும் முடியாது.

அத்தனை பலம் பொருந்திய யோகமா இந்த சிவராஜா யோகம் என்று சிந்திக்கிறீர்கள்.

சரி. இந்த சிவராஜா யோக அமைப்பு பெற்ற ஜாதகம் எப்படி இருக்கும். எனக்கு இந்த யோகம் இருக்கிறதா என்று எப்படி தெரிந்து கொள்வது என்ற ஆவல் எல்லோருக்கும் இருக்க தானே செய்யும்.

சரி பார்த்துக் கொள்ளுங்கள். குருவும் சூரியனும் தான் இந்த அமைப்புக்கு ஒன்று சேர்வார்கள். கிரகங்களின் தலைமை கிரகமான சூரியனும் ஜீவகாரனான குருவும் ஒருவரை ஒருவர் சம சப்தமாக பார்த்துக் கொண்டால் இந்த யோகம் அமையும், இதில் குரு பாவ தன்மை பெறாமால் இருந்தால் இது போன்ற பதவியும் அதிகாரமும் தானே வந்து விடும்.

லக்கினம், கேந்திரம் மற்றும் கோணத்தில் இணையும் போது, இந்த யோகம் அமைந்து விடுகிறது.

வக்கிரம் பெற்ற குரு, ஏழாம் இடத்தில் இருந்து சூரியன் பார்வை பெற்றாலும் இந்த யோக அமைப்பு உண்டு என்றாலும் அதற்கு பதவியை தட்டி பறிக்கும் வாய்ப்பும் அமைந்து விடும்.

அமைதிப்படை என்ற திரைப்படத்தில் அமாவாசையாக இருந்த ஹீரோ, மணிவண்ணனின், கட்சி தலைமை பதவியை தட்டி பறிப்பது போல என்று புரிதலுக்காக வைத்துக் கொள்ளுங்கள்.

பொன் பொருள் சேர்க்கையோடு, பதவி, அதிகாரம் மக்கள் செல்வாக்கு என அனைத்தையும் தரும் இந்த யோகம் பொதுவாக அரசு அதிகாரிகள், செல்வாக்கு பெற்ற அரசியல்வாதிகள் ஜாதகத்தில் இருப்பதை காணலாம்.

அய்யா, குருவுக்கு சேர்ந்த சூரியன், அல்லது குருவுக்கு ஏழில் இருந்தால் மட்டும் தான் இந்த யோகம் கிடைக்குமா? மற்ற இடங்களில் இருந்தால் இந்த அமைப்பில் கொஞ்சமாவது கிடைக்குமா என்று சிலர் கேட்பார்கள்.

இந்த யோகம் செயல்பட வேண்டும் என்றால் இந்த அமைப்பு இருக்க வேண்டும் அத்துடன் லக்கினாதிபதியும் பலமாக அமைந்து விட்டால் இந்த யோகம் நிச்சயமாக பலன் தரும். மாறாக மற்ற இடங்களில் அமைந்தால் இந்த யோகம் இல்லை என்று தான் பொருள். சரி வேற அமைப்பு உள்ளவர்களின் எதிர்பார்ப்பை பூர்த்தி செய்ய சில வற்றை சொல்கிறோம் சரியாக உள்ளதா பாருங்கள்.

இது போன்ற பல யோகங்கள் இருக்கிறதே; அதையெல்லாம் எடுக்காமல் இந்த யோகத்தை மட்டும் சிறப்பாக சொல்ல காரணம் என்ன என்று சிந்தித்து பாருங்கள்.

குருவுக்கு 2ல் சூரியன் இருந்தால், கூடவே செவ்வாயும் சேர்ந்து விட்டால், அரசு துறை மூலம் ஆதாயம் உண்டு ஆனால் அதிகாரம் இல்லை. குருவுக்கு 3ல் சூரியன் இருந்தால், அதிகார பதவி இருந்தாலும் அதிகாரம் செய்ய மாட்டார்கள், ஆளுமை இருக்காது. இது போல நிறையா சொல்லிக் கொண்டே போகலாம்.

வெகு அரிதாகவே காணப்படும், இந்த சிறப்பான யோகம் பற்றிய சிந்தனை வந்தது அதை உங்களுக்கு பகிர தந்தோம். இது போன்ற அமைப்பு நமது பிள்ளைகளுக்கு இருந்தால் என்று யோசிக்கிறீர்கள் புரிகிறது. அப்படி அமைப்பு இல்லை என்றாலும் பரவாயில்லை, தொடர்ந்து இறைவழிபாடு செய்யுங்கள். இனி இன்னொரு வாய்ப்பில் இது போன்ற அல்லது இதை ஒத்த அமைப்பு கிடைக்கும். நம்பிக்கையுடன் இருங்கள்.

சரி உங்கள் ஜாதகத்தில் சூரியன் எங்கே இருக்கு பாருங்க.. நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 21 -

சோதிடத்தில் நம்ப்பிக்கை இருக்கோ இல்லையோ... நமக்கு ஏதாவது ஒரு கஷ்டம்னு வந்துட்டா, நல்லதா நாலு வார்த்தை யாராவது சொல்ல மாட்டாங்களா..?! என்ற ஏக்கம் நமக்கு இல்லாமல் இல்லை.

நானும் தான் பாருங்க.. படாத கஷ்டம் இல்லை.. எனக்கு வந்த கஷ்டம் யாருக்கும் வர கூடாது என்று ஏக்கத்தை கொட்டாதவர்களும் இல்லை..

சோதிடரை பார்த்தவுடன், சார் எனக்கு இந்த ராசி எனக்கு வாழ்க்கை எப்படி இருக்கும் என்று சோதிடரின் அறிவு திறமை அவருடைய நேரம் எதையும் மதிக்காமல் எனக்கு பலன் சொல்லுங்க என்று உரிமையுடன் கேட்பவர்களும் உண்டு.

கொஞ்சம் யோசித்து பாருங்க சோதிடரும் உங்களைப் போல தானே.. கஷ்ட நஷ்டங்கள் உங்களைப் போல அவருக்கும் இருக்கும் தானே.. அவரை பார்த்தவுடன், நேரம் காலம் இல்லாமல் நீங்கள் free ஆக இருக்கும் போது, அவர் free ஆக இருக்க வேண்டும் என நினைத்து போன் செய்து பலன் கேட்பது, இதெல்லாம் நாகரீகமா? என்று யோசிக்க தொடங்கி விட்டால்...! அடுத்தவர் கஷ்டங்களை நினைத்து வருந்த தொடங்கி விட்டால் உங்கள் வினைப்பயன் குறைந்து விடாதா என்ன?

இன்னும் சிலர் சோதிட பலன்களை இலவசமாக சொல்ல வேண்டும் என நினைப்பார்கள்.. இன்னும் சிலர் அள்ளிக் கொடுக்கும் அளவுக்கு பணம் இருந்தாலும் கிள்ளிக் கொடுக்க கொடுக்க கூட யோசிப்பார்கள்.

இன்னும் சிலர் சில ஆயிரங்களை கொடுத்து விட்டு குடும்பத்தில் உள்ள அத்தனை பேருக்கும் ஆயுள் முழுவதும் பலன் சொல்ல வேண்டும்

என எதிர்பார்பார்ப்பார்கள். ஒரு கால் ஆயுள் பலன் சொன்னாலும் அதை அவரே நினைவில் வைத்துக் கொள்ள மாட்டார் என்பது வேற சங்கதி.

அப்படின்னா.... நான் செய்தது சரியில்லை என்று சொல்றீங்களா? என்று உங்களுக்குள் அந்த எண்ணம் வருகிறதா? உங்களுக்காக தான் இந்த செய்தி.

நீங்கள் கொடுக்கும் சில ஆயிரங்களால், அவர்கள் குடும்ப செலவுக்கு நீங்கள் உதவுவது என்ற எண்ணத்தை முதலில் கைவிடுங்கள்.

ஒரு மருத்துவர் போல தான் சோதிடரும். மருத்துவர் சில ஆண்டுகள் படித்து விட்டு வந்து மருத்துவ ஆலோசனை தருவது போல சோதிடரும் தன் அறிவு நேரம் உழைப்பு பணம் இத்துடன் ஆன்மிக பயிற்சி மற்றும் தூய ஒழுக்கம் என பல நிலையினை கடந்து வந்து சோதிடராக உங்களுக்கு ஆலோசனை சொல்ல வருகிறார், என்ற அடிப்படையை புரிந்து கொள்ளுங்கள்.

ஒரு மருத்துவர் நோய் வந்த பின் நோய் தீர்க்கும் மருந்து தந்து உங்களை நோயை குறைப்பது போல, ஒரு சோதிடர் அடுத்து எதிர்நோக்கும் சவால்களை அடையாளம் காட்டி அதை எதிர்கொள்ளும் உத்தியை தந்து ஊக்கு படுத்தி ஆற்றுப்படுத்துகிறார்.

மருத்துவருக்கு பல நூறுகளில் கட்டணம் செலுத்த தயங்காதவர்கள், சோதிடருக்கு சில ஆயிரம் தருவதற்கு யோசிக்கலாமா? என்று உங்களுக்குள் கேட்டுப்பாருங்கள். அந்த உணர்வு உங்களை தட்டி எழுப்பினால், நீங்கள் விழித்துக் கொள்வீர்கள்.

நானும் இது போல சில தெரியாமல் செய்து இருக்கிறேன். இதற்கு பிராயச்சித்தம் உள்ளதா என தெரியவில்லை என யோசிக்கிறீர்கள் புரிகிறது. சரி .. இப்போ நான் என்ன செய்யனும், என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது.

நகைச்சுவை கலந்து பலன் சொல்லும் சோதிடர், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்பது போல கட்சிதமாக சொல்பவர், உங்களுக்கு புரிய வேண்டும் என்று கதை போல சொல்லி தெளிவு படுத்துபவர்கள், கால தேச வர்த்தமானம் என்று சொல்லும் சூழ்நிலை அனுசரித்து சொல்வது, இப்படி அவரவருக்கு ஒரு பாணி இருந்தாலும், ஒரு சோதிடரை சந்தித்து, ஜாதக பலன் கேட்க என்ன செய்ய வேண்டும் என்பதை குறித்துக் கொள்ளுங்கள்.

ஒரு சோதிடரை சந்திக்கும் முன் அவரை முன்பே தொடர்பு கொண்டு இந்த தேதியில் இந்த நேரத்தில் சந்திக்க வரலாமா என்று நேரம் குறித்து கொள்ளுங்கள். அந்த குறிப்பிட்ட நேரத்தில் காலம் தாழ்த்தாமல் உங்கள் முறைப்படி அவரை சந்தியுங்கள்..

ஒருவேளை, அந்த குறித்த நேரத்தில் உங்களால் சந்திக்க இயலவில்லை என்றால், அவரை தொடர்பு கொண்டு உங்கள் இயலாமையை சொல்லுங்கள். அவரால் சந்திக்க முடியவில்லை என்றால் அவரை கோபித்துக் கொள்ளாமல் உங்கள் விதிப்பயன் இப்படி அமைந்து விட்டது என்று அமைதி கொள்ளுங்கள்.

நீங்கள் கேட்கும் நேரத்தில் அவர் appointment தரவில்லை என்றால் அவரை கோபித்துக் கொள்ளாமல் அவர் நேரம் தரும் வரையில் பொறுமையாக காத்திருங்கள். இதென்ன சார் நான் காசு கொடுக்கிறேன் அவர் பலன் சொல்ல வேண்டியது தானே என்று எடுத்த எடுப்பில் பேசாமல் எதுவும் சிந்திக்காமல், நீங்கள் நேரம் கேட்டவுடன் சோதிடரை சந்திக்க அவர் நேரம் குறித்து தர வேண்டும் என்று எதிர்பார்க்காதீர்கள்..

உங்கள் நேரம் சரம், ஓரை இப்படி பல சந்தர்ப்பங்களை கருத்தில் வைத்து தான் பொதுவாக சோதிடர்கள் ஜாதகம் பார்க்க ஜாதகத்தை கையில் எடுப்பார்கள் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

சோதிடரை சந்திக்க நீங்கள் எதிர்ப்பார்த்த நேரம் உங்களுக்கு கிடைத்து விட்டால், அவரை சந்திக்கும்போது போது, பவ்யமாக

அடக்கமான அன்புடன் உரிய மரியாதையுடன் குறைந்த பட்சமாக சகஸ்ர தனங்களுடன் தக்ஷனையாக கொடுத்து விட்டு ஆலோசனை கேளுங்கள். இதே மரியாதையையும் அன்பையும் பலன் கேட்டு முடிந்த பின்பும் வெளிப்படுத்துங்கள்.

உங்களுக்குரிய பலன்கள் உங்களுக்கு சாதகமாக வரவில்லை என்றாலும் இது வினைப்பயன் என்று அமைதி கொள்ளுங்கள்.

பலன் கேட்டு முடித்த பிறகு, அவருக்குரிய கட்டணம் அல்லது தக்ஷினையை கொடுக்காதீர்கள். ஜாதக பலன் பார்ப்பதற்கு முன்பே தக்ஷினையை தர வேண்டும் என்பதை புரிந்து கொள்ளுங்கள். ஒரு சோதிடம் பார்க்கும் முறை என்றே தனியாக சொல்ல முடியும். அதை முழுவதும் கடைப்பிடிக்க முடியாவிட்டாலும், அடிப்படையில், அவரும் நம்மைப்போல தான் என்ற உணர்வுகளுடன் ஆயிரக்கணக்கில் தக்ஷனை கொடுத்து ஆலோசனை கேட்க வேண்டும் என்பதை உறுதியாக வைத்துக் கொள்ளுங்கள்.

அது சரி ஒவ்வொரு சோதிடரும் ஒரு விதமாக கட்டணம் வாங்குகிறார்கள் ஒவ்வொருவரும் ஒரு விதமாக பலன் சொல்றாங்க இதை எப்படி எடுத்துக் கொள்வது என யோசிக்கிறீர்கள் சரி தான் சில சொல்கிறேன் சரியாக உள்ளதா பாருங்கள்..

உங்களுக்கு பலன் சொல்லும் சோதிடரின் ஜாதகத்தில் இரண்டாமிடத்தில் கேது நின்று அதுவும் குருவின் காலில் நின்றால், அவர் சொல்வது வேத வாக்கு. அது நிச்சயம் பலிக்கும் நடக்கும்.

புத ஆதித்ய யோகம் இருக்க கூடிய எல்லா ஜாதகத்திலும் கேது பகவான் இணைவு பெற்று இருந்தால் அந்த சோதிடர் தரும் பலன்கள் சுருக்கமாக “நச்” என்று இருக்கும்.

பொருள் கோணத்தில் சர்ப்ப கிரகம் இருந்தால் அவர் சொல்லும் பலன்களுக்கு மறுப்பு சொல்பவர்கள் இருக்க மாட்டார்கள்.

நல்வாக்கு பலிக்க கூடிய வாக்குஸ்தனாமும், பலன் சொல்லும் ஒழுக்க முறையும் அமைந்து விட்டால் அந்த சோதிடரை விடாமல் அவருக்கு சேவகம் செய்து கொண்டு இருக்க முயலுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 22 -

கருப்பு கலரில் ஒரு கட்டம். கேமிரா உள்ள ஒரு ஸ்மார்ட் போனை வைத்து அங்கே இங்கே நகர்த்தி, ஒரு கிளிக் அடிக்கிறதை நாம் அடிக்கடி பார்த்து இருப்போம். வளர்ந்து விட்ட தொழில் நுட்ப வளர்ச்சியில் இப்போ இது தான் ஸ்டைல் என்று சொல்வதை விட இப்போ இது தான் வசதி.

பில் போடணுமா, பணம் அனுப்பனுமா, முகவரியை பகிர்ந்து கொள்ள வேண்டுமா பாஸ்வேர்ட் ஷேர் செய்ய வேண்டுமா ஒரு படத்தை ரகசியமாக அனுப்ப வேண்டுமா? இந்த ஒன்று போதும் என்ற நிலையில் இப்போ நாம வந்து விட்டோம்.

அட.. அது ஒன்னும் இல்லீங்க.. அதுக்கு பெயர் QR Code என்று சொல்லுவாங்க.. அப்படின்னா என்னன்னு பல பேருக்கு தெரிந்து இருக்கும். கொஞ்சம் விவரமா சொன்னால் நன்றாக இருக்கும் தானே.

சிறியது முதல் பெரியது வரை எல்லா வணிக நிறுவனங்களிலும் இந்த QR Code பயன்பாட்டில் உள்ளது. பழ வண்டிகளில் இருந்து பெட்ரோல் பங்கு வரை பணம் செலுத்தும் போது, இதை ஸ்மார்ட் போனில் கேமிராவை காண்பித்து தகவல்களை பெற்றுக் கொள்ள முடியும்.

ஒரு குட்டி எஸ் எம் எஸ் போன்ற செய்தியை தன்னகத்தில் கொண்டது தான் இந்த QR Code. இது பணம் செலுத்துவதற்கு மட்டும் அல்ல, தகவல் பரிமாற்றம் செய்வதற்கும், பயன்படுத்திக் கொள்ளலாம்.

பெரிய மால் அல்லது டிபார்ட்மென்ட் ஸ்டோர் களில் இதே போல ஒரு பார் கோட் இருக்கும் அதை ஸ்கேன் செய்ததும் கணினியில் பில் பட்டியலில் அந்த பொருள் விவரம் வரும். இந்த பார் கோட் தான் QR Code முந்தைய வடிவம். அந்த பார் கோடில் நிறைய தகவல்கள் சேகரிக்க முடியாது என்பதால் அதன் அடுத்த பருவமே இந்த QR Code.

quick response code என்று சொல்லக் கூடிய இந்த QR Code, ஜப்பான் நாட்டில் தோன்றி உலகம் முழுவதும் எல்லா இடத்திலும் இப்போது கோலோச்சி நிற்கிறது.



பல புள்ளிகள் சேர்ந்து ஒரு சதுர வடிவ கட்டமாக இருக்கும் இந்த QR Code படம் எழுத்து, முகவரி, பாஸ்வேர்டு என எதையும் எந்த மொழியிலும் சேர்த்து வைக்க முடியும். இந்த QR Code ஐ decode அதாவது படிக்க தனிப்பட்ட கருவிகள் எதுவும் தேவையில்லை. ஒரு கேமிரா உள்ள ஸ்மார்ட் போன் இருந்தால் போதும்.

அதெல்லாம் சரிங்க இந்த QR Codeக்கும் சோதிடத்திற்கும் என்ன தொடர்பு என்று யோசிக்கிறீர்கள் புரிகிறது. அதை சொல்ல தான் இந்த பதிவு.

உங்கள் வசம் உள்ள QR Codeயை சற்று கவனித்து பாருங்கள். அந்த சதுர வடிவ கட்டத்தில் மூன்று மூலைகளில் ஒரு சிறய கட்டம் இருக்கும் ஒரு மூலையில் மட்டும் இந்த கட்டம் இருக்காது. சரியான திசையில் இருந்து படிக்க இந்த கட்டங்கள் தான் உதவுகிறது. இது போன்ற நுணுக்கங்களை கொண்டது தான் QR Code.

இதை சோதிடத்துடன் வைத்து சிந்திக்க நோக்கினால், கேந்திரம் என்று சொல்லக் கூடியது 1-4-7-10 என சொல்லக் கூடிய இடங்கள், கோணம் என்று சொல்லக் கூடியது 1-5-9 என்ற இடங்கள். இதில் 1 என்பது கோணத்திலும் கேந்திரத்திலும் வரும்.

இந்த இலக்கின பாவம் தான் QR Codeஇல் உள்ள சதுரமான கட்டத்தில் காலியாக உள்ள மூலை. மற்ற மூன்று இடங்கில் உள்ள கட்டம் தான் 4-7-10 ஆகிய இடங்கள்.

நான்காம் பாவக காரகமாக நிறைய சொல்ல முடியும் அதில் இந்த QR Code சிந்தனையுடன் சேர்த்து சொல்ல, இருதயம், அறிவு பூர்வமாக சிந்தித்தல் மெக்கனிக்கல் வாழ்க்கை சுரங்கம் போன்றவை இந்த 4ம் பாவகத்தில் வரும்.

சமூக கட்டுப்பாடு, சமூகத்தை சார்ந்து இருப்பது என்பன 7 ம் பாவகத்தின் காரகத்துவமாக வரும்.

தொழில் தொடர்பான முக்கியமான பாவக காரகத்துவம், பொறுப்புணர்வு, கடமை இது போல 10 ம் பாவக காரத்துவமாக வரும்.

இது போல பாவக காரகங்களை பல ஆயிர கணக்கில் சொல்ல முடியும். இது போன்ற பாவக காரகங்கள், ராசி காரகங்கள், கிரக காரகங்களை முழுமையாக கையாள பழகி விட்டால் சோதிடம் சொல்வது சுலபமாக அமைந்து விடும். சோதிடம் என்பது எதிர்கால பலன் சொல்வது மட்டும் அல்ல. அது தான் வாழ்க்கை முறை. அறம் சொல்லும் கூற்று என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்.

அதனால் தான் ஒரு ஒழுக்கமான சோதிடரை, அறம் சொல்பவன் என்று நாடாளும் மன்னரும் மதித்து வணங்குவார்கள். இத்தனை உயர்ந்த சிறப்பு பெற்றவர்கள் தான் நம்மை வழி நடத்தும் சோதிடர்கள், இந்த பொறுப்பில் உள்ள சோதிடர்கள் சுய ஒழுக்க கட்டுப்பாட்டுடனும், உயர்ந்த நிலையில் உள்ள சோதிடர்களை சந்தித்து ஆலோசனை மற்றும் ஆசி பெறுபவர்கள், மிகுந்த மரியாதையுடனும் நடந்து கொள்ள வேண்டும் என்பது அவரவர்கள் பொறுப்பு என்பதை சொல்லாமலே புரிந்து கொள்ள முடியும்.

இந்த பாவக காரகத்துவ இணைப்பே ஒரு தகவல்களை சேர்த்து சொல்லும் அமைப்பு இந்த அமைப்பு கட்டத்தை வைத்து தான் QR Code பிறந்து இருக்கிறது என்ற சோதிட சிந்தனையை இணைத்து பொருத்தி பாருங்கள்.

இயல்பாக நடக்க கூடிய ஒவ்வொரு செயல் முறையிலும் சோதிட பதிவுகள் இருப்பதை உணர முடியும். ராகு-சனியின் காரகத்தில் அமைவது தான் இந்த QR Code என்றால் புதிய சிந்தனையாக இருக்கிறது அல்லவா.

என்னது ஒரு QR Codeஇல் இப்படி ஒரு சோதிட சிந்தனையா என்று யோசித்து கொண்டே இருந்தால் எப்படி? அருகில் உள்ள QR Codeயை தடவி பாருங்கள்.. கேந்திரம் என்று சொல்லக் கூடிய நான்கு மூலைகளில் ஒரு மூலையை தவிர மற்ற இடங்களில் ஒரு சின்னதாக கட்டம் இருக்கும் என்பதை அறிவீர்கள்.

அட இவ்வளவு நாள் இது தெரியாமலே இந்த QR Codeயை பயன்படுத்தி வருகிறேனே என்று நினைக்காமல், இது போன்ற இயல்பு வாழ்க்கையில் சோதிட சிந்தனையை எடுத்து வந்தால் சோதிடம் இல்லாமல் வாழ்க்கை ஓட்டம் இல்லை என்பதும் சோதிடம் என்பது ஒவ்வொரு அங்கத்திலும் இடம் பெறுவதும் புரியும்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# பதிப்புரை

இது சோதிட குறிப்புகளை தரும் புத்தகமா? அல்லது நமது அறியாமையை தட்டி காட்டி அறிவை புகட்டும் புத்தகமா? என்ற வியப்பில் வழக்கம் போல நூல் ஆசிரியரின் வித்தியாசமான சிந்தனைகளை விவரம் பொதிந்த தகவல்களுடன் தந்து இருப்பதில் மகிழ்ச்சி.

அவர் தம் திறமையும் படைப்பு திறனும் ஒவ்வொரு பதிப்பிலும் பதிப்பாசிரியராக பார்த்து வியந்து இருக்கிறோம். அந்த வரிசையில், இது மேலும் ஒன்று. அவர் தம் எண்ணங்களிலும் சரி, செயல்களிலும் சரி, தனக்கு என தனி முத்திரை கொண்டு, தனி ஒருவனாக, தன்னை முன் நிறுத்தி காட்டும் வல்லவர். இந்த இருபதாம் நூற்றான்டில், இப்படி கூட ஒருவரா என்று நாங்கள் வியப்பில் ஆழ்ந்தது உண்டு. இதை பெருமகனாரின் எண்ணங்களையும் சிந்தனைகளையும் நூலக பதிப்பித்து படைத்து தருவதில் பேரின்பம் அடைகிறோம்.

தொடர்ந்து வரும் அவரது நூல்களை தொய்வில்லாமல் தரும் சிந்தனைகளை அன்பர்கள் படித்து பயன் பெற வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த நூல்கள் பல்வேறு ஆன்லைன் தளங்களில் கிடைக்கும். போட்காஸ்ட் சானல்களில் ஆடியோ புத்தகமாகவும் கேட்கும் படி இதனை அமைத்து தந்துள்ளோம். நூல்களை படித்து பயன் பெறுவது ஒன்றே நூல் ஆசிரியருக்கு நாம் தரும் ஊக்க மருந்து எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் அறிவை பகிரும் இந்த நூல் ஆசிரியர் தம் எண்ணங்களுக்கு பலம் சேர்ப்போம் பயன் பெறுவோம்.

- பதிப்பாளர்

# ஆசிரியரின்

# மக்கள் மனம் கவர்ந்த பிற நூல்கள்.



















**இந்த புத்தகங்களை, ஆன்லைனில்,**

**அமேசான்**, **விக்கிமீடியா**, **மின் நூலகம் மற்றும் ஆடியோ**

**புத்தகமாக** Channel G podcast**ல் கேட்கலாம்.**

**இந்த புத்தக கட்டமைப்புக்கு**
**பணம் தந்து உதவலாம்.**

**இது இன்னும் புத்தகம் வெளிவர**
**ஊக்கம் அளிக்கும்.**

# நூலாசிரியர் பற்றி…

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், இன்று உலக எழுத்தறிவு தினமாக கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். "சித்தாந்த ரத்னா", "திருவருட் செல்வர்", "கைரேகை கலைஞன்" போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னை சுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெயில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம். இவரின் எண்ணக் கருத்துக்களை நூலாக்கி படைப்பதில் பதிப்பாளராக பெருமை கொள்கிறோம்